॥ श्रीः ॥

श्रीरामभवनग्रन्थमाला—२.

# ॥ श्रीविष्णुसहस्रनामस्तोत्रम् ॥

विद्याविनोदवाधूलरामस्वामिशर्म-

विरचितद्रविडभाषाविवरणसमेतम् ॥

1238



श्रीरङ्गस्थ

श्रीवाणीविलासमुद्रायन्त्रालये

संमुद्रितम् ।

१९२०.

# FOREWORD.

Sri-Vishnu—Nama—Sahasram or the Thousand Names of Vishnu forms an episode in Chapter CCLIV of Anusasana Parvan of the Mahabharata. In answer to an exhortation from Yudhisthira to disclose to him the one God, all supreme, whose praises, if sung, are the certain means of emancipation from the trammels of life and world, Bhishma mentioned Vishnu and narrated his names, a thousand. Etymologically some of these names are synonymous but their efficacy is not merely in their connotation, but in their verbal expression. The names of Bhishma's narrative were not coined for the occasion to make up the number, but were collected from tradition and scripture as eulogised and meditated upon, as he said, by the great seers of old. If then every

one of these names was deemed to be of particular merit in itself, we can well fancy why Bhishma thought so high of the combination of a thousand names of that superior order. The sanctity with which they are regarded in India is unique and traditional. They are a Mahamantra, which can expiate sin, dispel ignorance and avert calamity and are an object of real reverence in every Hindu household.

The word Vishnu means 'all-pervading.' In this sense it rises beyond the Trimurthis and other divinities of the Hindu pantheon. It denotes the Supreme Spirit, the Paramatman, that is beyond all limitations of time or space, and that is the highest goal of Hindu philosophy. The thousand names express the several phases of the activities and potentialities of that Supreme Spirit, in form, action and quality, and all that is great and glorious in every sphere is but its relevent attribute. A study of these

names embraces in short the whole field of Hindu theology, mythology and philosophy.

It is the purpose of the accompanying pages to expound to the lay reader their full import and merit in a common vernacular of South India. With his sound learning and sincere devotion, Mr. K. N. Ramaswami Sarma, *Vidyavinoda* is eminently fitted for such an exposition. His gloss is based on the Bhashya of Sankara and is a lucid epitome of it, shorn however of its disquisitions of rigid philosophy not of easy comprehension. Despite the circumstance that Sankara had to interpret a few names in the light of his advaitic doctrine the work before us cannot be considered in any view sectarian and will help an appreciation of the meritorious ideas involved in the sacred collection.

M. KRISHNAMACHARIAR. M.A. M.L,
Dist. Munsiff, Bapatla.

## ॥ अभिप्रायाः ॥

॥ श्रीः ॥

॥ श्रीचन्द्रमौलीश्वराय नमः ॥

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकर-
भगवत्पादप्रतिष्ठित श्रीकाञ्ची कामकोटि-
पीठाधिपजगद्गुरु श्रीमच्चन्द्रशेखरेन्द्र
सरस्वती श्रीपादैः

अस्मद्त्यन्तप्रियशिष्यरामस्वामिशर्मणः
सर्वाभीष्टसिद्ध्यै क्रियते नारायणस्मृतिः ॥

श्रीजगद्गुरुभगवत्पादविरचितं श्रीविष्णुसहस्रनाम-भाष्यं द्राविडभाषया तद्भाष्यार्थाविरोधेन भवता विलिखितमवालोकि । गीर्वाणभाषायां परिचयरहितानां ब्राह्मणानामप्ययमुपकाराय भवेत् ।

| | |
|---|---|
| मुखाम्—कुम्भघोणम्<br>कालयुक्तसंवत्सराषाढ<br>शुद्धतृतीया गुरुवासरः। | नारायणस्मृतिः । |

॥ श्रीः ॥

श्रीमच्छंकरसंयमीन्द्रगुरुराड्भाष्यानुसारेण यत्
भक्त्या विष्णवभिधासहस्रमतुलं व्याख्यात्यनर्घार्थकम्।
रामस्वामिमहाशयेन विदुषा विद्वन्मनोनन्दनम्
तद्दृष्ट्वा मम सुप्रसीदति मनस्तत्त्वार्थसारैकदृक् ॥१॥
समीचीनैर्भावैर्ललितललितैः शब्दनिखरै
र्गुणाढ्यैः सन्दब्धं महितकृतिरत्नं विजयते ।
स्फुरद्रामस्वामिप्रगुणसुकृतश्रीप्रकटकम्
तदेतत्सन्धार्य हृदि बुधजनैर्भक्तिभरितैः ॥ २ ॥

त. वाधूल श्रीनिवाससूरिः

साहित्यरत्नम् ।

प्रधानसंस्कृतपण्डितः सैण्ड् जोसफ् कालेज्

२९-१०-१९.                                        त्रिशिरःपुरी

---

॥ श्रीः ॥

वाधूलवंशतिलकः श्रीमान् रामार्यभूसुरवरेण्यः ।
द्राविड्याकृत विवृतिं विष्णोर्नाम्नां सहस्रस्य ॥ १ ॥

सुसमा शैली विवृते रवश्यवक्तव्यमर्थमभिदधती ।
अखिलानामुपकृतये भवेदिति प्रत्ययो दृढोऽस्ति मम ॥

आत: सर्वैरास्तिकवर्यैरियमादरेण पठनीया ।
इति कुम्भकोणनगरीवास्तव्य: कृष्णसूरिराशेते ॥

R. V. कृष्णमाचार्यः अभिनवभट्टबाण:

---

Coimbatore
29-11-19.

My dear Sir,

I have perused your valuable work on "Vishnu Sahasranama" It brings out clearly and concisely the very essence of our perfect and holy religion. I have no doubt that it will enlighten, purify, and uplift the hearts of the readers.

Yours Sincerely
K. S. RAMASWAMI SASTRY. B.A, B.L.
Sub Judge.

---

I have read through this book and I find it very useful and instructive. The Sahasranama is one of the most popular works among Hindus and many people know it by heart and make Japams of it for various good purposes. It is very essential that

the meanings of the various names should be understood by all people who learn it by heart. The names are not a random collection, but they are arranged in excellent order so as to preserve continuity of connected thought. It is impossible to find a similarly grand and closely connected collection, of mere names in any other language. The work has been expounded by two great masters Sri Sankaracharya and Sri Parasara Bhatta. Both these commentories are masterly and should be read and enjoyed by all lovers of the Sahasranama. Any help to understanding the meaning and connection of the names must be welcome and this book which expounds the namas as expounded by Sri Sankaracharya cannot fail to be of great use to the Hindu Public.

Cantonment
Trichinopoly
10th Dec. 19.

A. V. GOPALACHARI,
M.A B.L
*High Court Vakil.*



॥ श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः ॥

# श्रीविष्णुसहस्रनामस्तोत्रम् ॥

## द्रविडभाषाविवरणसमेतम् ॥



महतस्तमसः पारं पुरुषं ह्यतितेजसम् ।
यं ज्ञात्वा मृत्युमत्येति तस्मै ज्ञेयात्मने नमः ॥ १ ॥

श्रीमद्विष्णुसहस्रनामपठनात्संजातकौतूहलः
श्रीमच्छंकरपूज्यपादरचितं भाष्यं समालोचयन् ।
श्रीमद्देशिकपादलब्धहृदयः श्रीविष्णुनामान्यहं
व्याख्यास्यामि सकौतुको मयि हरिः प्रीणातु सर्वात्मकः ॥

वैशम्पायन उवाच ।

श्रुत्वा धर्मानशेषेण पावनानि च सर्वशः ।
युधिष्ठिरः शान्तनवं पुनरेवाभ्यभाषत ॥ १ ॥

வைசம்பாயனர் ஜனமேஜயரைப் பார்த்துச் சொல்லுகிறார்.

தர்மபுத்திரர், இஹபரலோக ஸுகங்களை ஸாதிக்கக்கூடிய வேத லக்ஷணங்களான தர்மங்களையும், பாபங்களைப் போக்கக்கூடியவைகளையும் பாக்கியன்றியில் ஸர்வப்பிரகாரமாய்க் கேட்டு சந்தனுவின் குமாரரான பீஷ்மரைப் பார்த்து மறுபடியுமே சொன்னார். தனக்கு உபதேசிக்கப்பட்டவைகளில் அல்பப் பிரயாஸ ஸாத்தியமாயும், அதிக பலனைக் கொடுக்கக் கூடியதாயும், ஸகல புருஷார்த்தங்களை ஸாதிக்கக் கூடியதுமான தர்மம் சொல்லப்படவில்லையென்று கேட்கத் தொடங்கினார்

युधिष्ठिर उवाच—

किमेकं दैवतं लोके किं वाप्येकं परायणम् ।
स्तुवन्तः कं कमर्चन्तः प्राप्नुयुर्मानवाः शुभम् ॥ २ ॥

को धर्मः सर्वधर्माणां भवतः परमो मतः ।
किं जपन्मुच्यते जन्तुर्जन्मसंसारबन्धनात् ॥ ३ ॥

யுதிஷ்டிரர் சொல்லுகிறார்;—உலகத்தில் முக்கியமான, அதாவது, எவருடைய ஆக்ஞையால் ஸகலமும் பிரவிர்த்திக்கின்றதோ அப்படிப்பட்ட முக்கியமாயும் சிரேஷ்டமாயுமிருக்கிற தேவதை எது? இது முதல் கேள்வி. உலகத்தில் முக்கியமான சரணாகதியடையவேண்டிய சிரேஷ்டமான ஸ்தானமானது எது? எதை ஸாக்ஷாத்காரம் செய்த மாத்திரத்தில் ஹ்ருதயத்திலுள்ள ஸகல ஸம்சயங்களும ஸகல கர்மாக்களும நாசத்தையடைகின்றனவோ, எதை அறிந்த மாத்திரத்தில மோக்ஷஸாம்ராஜ்யம ஸித்திக்கின்றதோ, எங்கும் பயமில்லாமல் திரிகின்றாரோ, எதை த்யானம் செய்வதால் மறுஜனனம் இல்லையோ, எதைத் தவிர வேறு தேவதை இல்லையோ, அப்படிப்பட்ட தேவதை எது என்று இரண்டாவது கேள்வி. எந்த தேவதையை குணஸங்கீர்த்தனம் செய்துகொண்டும், எந்த தேவதையை பாஹ்யம், ஆப்யந்தரம் எனப் பலவிதங்களால் பூஜை செய்துகொண்டும் மானிடர்கள் ஸ்வர்க்கம் முதலான சுபமான பலனையும் அடைவார்களோ என்று 3-4-வது கேள்விகள்.

ஏற்கனவே தங்களால் சொல்லப்பட்ட ஸகல தர்மங்களுக்குள் எந்த தர்மமானது சிற

ததென்று தங்களுடைய அபிப்பிராயம். இது 5-வது கேள்வி. ஜபிக்க யோக்கியமான எதை உச்சம், உபாம்சு, மானஸம் என்ற மூன்று விதங்களுக்குள் ஏதேனுமொன்றை யனுஸரித்து ஜபித்துக்கொண்டு பிராணியானது அவித்யையின் காரியமான ஜன்மம், ஸம்ஸாரம் இவைகளின் கட்டிலிருந்து விடப்படுகிறது. இது 6-வது கேள்வி

भीष्म उवाच—

जगत्प्रभुं देवदेवमनन्तं पुरुषोत्तमम् ।
स्तुवन्नामसहस्रेण पुरुषः सततोत्थितः ॥ ४ ॥

तमेव चार्चयन्नित्यं भक्त्या पुरुषमव्ययम् ।
ध्यायंस्तुवन्नमस्यंश्च यजमानस्तमेव च ॥ ५ ॥

अनादिनिधनं विष्णुं सर्वलोकमहेश्वरम् ।
लोकाध्यक्षं स्तुवन्नित्यं सर्वदुःखातिगो भवेत् ॥ ६ ॥

பீஷ்மர் சொல்லுகிறார்:—ஸ்தாவர ஜங்கமாத்மகமான ஜகத்திற்கு ஈசனையும், தேவர்களுக்கெல்லாம் தேவனையும், தேசம், காலம், வஸ்து இவைகளால் அளவிடப்படாதவராயும், கார்யகாரணாத்மகமான க்ஷரம், அக்ஷரம் இவைகளுக்கு

உத்கிருஷ்டராயுமிருக்கிற பரமாத்மாவை ஆயிரம் நாமாக்களால் ஸ்தோத்திரம் செய்துகொண்டு எப்பொழுதும் முயற்சியுடையவனாயிருக்கிற புருஷன் ஸமஸ்த துக்கங்களையும் தாண்டுகிறவனாக ஆவான். இது 6-வது கேள்விக்குப் பதில். பூஜகன் எப்பொழுதும் பக்தியுடன் எங்கும் பரிபூர்ணமாயும் விநாசக்கிரியை இல்லாத (அதாவது) சாச்வதராயிருக்கிற அந்தப் பரமாத்மாவையே பாஹ்யமான பூஜையைச் செய்துகொண்டும், ஆப்யந்தரார்ச்சனம் செய்துகொண்டும், மேலே சொல்லப்பட்டபடி ஸ்தோத்திரம் செய்துகொண்டும், நமஸ்கரித்துக்கொண்டும் (அதாவது) பூஜையின் இறுதியில் பகவானை ஸ்தோத்திரம், நமஸ்காரம் இவைகளால் திருப்தி செய்துகொண்டும், (அல்லது) பாஹ்யம், ஆப்யந்தரம் இவைகளால் பூஜை செய்தல், வாக்கால் ஸ்தோத்திரம் செய்தல், சரீரத்தால் நமஸ்காரம் செய்தல் என்ற மானஸிக, வாசிக, சாரீரக பூஜைகளைச் செய்துகொண்டும் ஸமஸ்த துக்கங்களையும் தாண்டுகிறவனாக ஆவான். இது 4-வது கேள்விக்குப் பதில்.

பிறப்பில்லாத (அதாவது) ஆறுவித பாவ (भाव) விகாரங்களில்லாதவராயும், எங்கும் வியா

யிக்கிருப்பவராயும், ஸமஸ்தமான உலகங்களுக்கும் ஈசுவரராயுமிருக்கிற பிரம்மா முதலானவர்களுக்கெல்லாம் ஈசுவரராயிருக்கிறவராயும் ஸமஸ்தமான உலகங்களையும் தன்னுடைய ஸ்வாபாவிகமான ஞானத்தால் ஸாக்ஷாத்தாய் அறிகிற பரமாத்மாவை இடைவிடாமல் ஸ்தோத்திரம் செய்துகொண்டு ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூன்றுவிதமான துக்கங்களையும் தாண்டுகிறவனாக ஆவான். இது 3-வது கேள்விக்குப் பதில்.

ब्रह्मण्यं सर्वधर्मज्ञं लोकानां कीर्तिवर्धनम् ।
लोकनाथं महद्भूतं सर्वभूतभवोद्भवम् ॥ ७ ॥

एष मे सर्वधर्माणां धर्मोऽधिकतमो मतः ।
यद्भक्त्या पुण्डरीकाक्षं स्तवैरर्चेन्नरः सदा ॥ ८ ॥

ஸ்ருஷ்டி கர்த்தாவான பிரம்மா, (அல்லது) தபஸ், பிராம்மணர், சுருதி இவைகளின் பொருட்டு அனுகூலராயும் ஸகல தர்மங்களையுமறிந்தவராயுற பிராணிகளுக்குக் கீர்த்தியை விருத்தி செய்கிறவராயும், ஸகல உலகங்களுக்கும் நாதனாயும், ஸகலத்திற்கும் உத்கிருஷ்டனாயிருக்கிறவனாயும், ஸமஸ்தப் பிராணிகளின் ஸம்ஸாரத்

திற்குக் காரணராயுமிருக்கிற ஹ்ருதய கமலத்தில் பிரகாசிக்கின்ற வாஸுதேவனை பக்தியுடன் குண ஸங்கீர்த்தன ரூபமான ஸ்துதிகளால் மனிதன் எப்பொழுதும் ஸத்கார பூர்வகமாய் அர்ச்சனையைச் செய்கிறான் என்று யாதொன்றோ இந்த தர்மந்தான் ஸமஸ்த வேத லக்ஷணமான தர்மங்களுள் மிகவும் சிறந்ததென்று பகவானுடைய அபிப்பிராயம். இது ௫-வது கேள்விக்குப் பதில்.

ஸ்துதிரூபமான அர்ச்சனைக்கு ஏன் அவ்வளவு ஆதிக்கியம் என்றால்:—ध्यायन्कृते यजन्यज्ञैस्त्रेतायां द्वापरेऽर्चयन्। यदाप्नोति तदाप्नोति कलौ सङ्कीर्त्य केशवम् ॥

கிருதயுகத்தில் தியானம் செய்துகொண்டும், திரேதாயுகத்தில் யாகங்களைச் செய்துகொண்டும், துவாபரயுகத்தில் அர்ச்சனை செய்துகொண்டும் ஒரு மனிதன் எந்த பலனை அடைவானோ அவ்வளவு பலனையும் கலியுகத்தில் பகவானுடைய நாமஸங்கீர்த்தனம் செய்வதால் அடைவான் என்று விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

परमं यो महत्तेजः परमं यो महत्तपः ।
परमं यो महद्ब्रह्म परमं यः परायणम् ॥ ९ ॥

இரண்டாவது கேள்விக்கு உத்தரம் :—
எந்தப் பரமாத்மாவானவர் பிரகிருஷ்டராயும், பிருஹத்தாயும், ஸகலத்தையும் பிரகாசிக்கும்படி செய்யக்கூடிய சைதன்ய லக்ஷணமான தேஜஸோ, *எந்தப் பரமாத்மா பிரகிருஷ்டமாயும் மஹத்தாயுமான தபஸோ அதாவது நியந்தாவோ, † எந்தப் பரமாத்மா பிரகிருஷ்டமான

---

* येन सूर्यस्तपति तेजसेद्धः । तं देवा ज्योतिषां ज्योतिः । न तत्र सूर्यो भाति न चन्द्रतारकम् । என்று ச்ருதி. यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् । यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥ என்று பகவத்கீதை 1[illegible]-வது அத்தியாயம் 12-வது சுலோகம்.

† यश्च इमं च लोकं परमं च लोकं सर्वाणि भूतानि योऽन्तर्यमयति । भीषाऽस्माद्वातः पवते । என்று ச்ருதிகள் तपः என்ற பதத்திற்கும் ஈசனாயிருக்கிறார் என்று அர்த்தம் भीषोदेति सूर्यः भीषास्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चमः இந்த மாதிரி ச்ருதிகளால் பரமாத்மாவின் ஐச்வர்யமானது அனவச்சின்னமாயும், அதிமஹத்தாயுமிருக்கிறது.

ஸத்யம், ஞானம், அனந்தம் என்று லக்ஷணங்களையுடைய மஹனீயமான பிரம்மமோ, எந்தப் பரமாத்மா, மறுபடி ஜன்மத்தையடைவோமோ என்று ஸந்தேகமே இல்லாத சிரேஷ்டமான கதியோ.

இப்பொழுது முதல் கேள்விக்குப் பதிலுரைக்கிறார்:—

पवित्राणां पवित्रं यो मङ्गलानां च मङ्गलम् ।
दैवतं देवतानां च भूतानां योऽव्ययः पिता ॥ १० ॥

பகவத்தியானம் செய்தல், பகவானுடைய குணகீர்த்தனம், ஆராதனம், இவைகளால் ஸமஸ்த பாபங்களும் நாசமடைகிறபடியால் பரிசுத்தம் செய்கின்ற தீர்த்தங்களுக்கெல்லாம் பரிசுத்தராயும், அல்லது ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமான புண்யம், பாபம், இவைகளுக்குக் காரணமான அக்ஞானம் இவைகளைத் தன்னுடைய தத்துவ ஞானத்தால் போக்கடிக்கிறபடியால் பவித்திரங்களுக்கெல்லாம் பவித்திரம் என்று சொல்லப்பட்டது. லோகம், அதன் ஸாதனம் இவைகளுக்கெல்லாம் பரமானந்த லக்ஷணமோ, தேவதைகளுக்கெல்லாம் ஸர்வோத்கிருஷ்டமான தே

வதையோ, எந்தத் தேவர் பிராணிகளுக்கெல்லாம் அழிவில்லாத பிதாவோ, அவர் ஒருவர் தான் உலகத்தில் தைவதம். இதற்கு அநுகூலமாக ஸ்ரீ சங்கரபாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கும் வாக்கியங்களைப் பார்க்க.

यतः सर्वाणि भूतानि भवन्त्यादियुगागमे ।
यस्मिंश्च प्रलयं यान्ति पुनरेव युगक्षये ॥ ११ ॥

तस्य लोकप्रधानस्य जगन्नाथस्य भूपते ।
विष्णोर्नामसहस्रं मे शृणु पापभयापहम् ॥ १२ ॥

யாதொரு தேவதையானது ஒன்றுதானென்று நிரூபிக்கப்பட்டதோ அதன் லக்ஷணங்களைச் சொல்லுகிறார்:—யுதிஷ்டிர மஹாராஜனே, கல்பத்தின் ஆதியில் எவரிடமிருந்து ஸமஸ்தமான பூதங்களும் உண்டாகின்றனவோ, எவரிடத்திலேயே மறுபடி யுகத்தின் இறுதியில் லயத்தையடைகின்றனவோ, (च என்ற பதத்தால்) கல்பத்திற்கும் பிரளயத்திற்கும் மத்தியில் எவரிடத்தில் பூதங்கள் இருக்கின்றனவோ, (यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति यत्प्रयन्त्यभिसंविशन्ति என்று சுருதி), அந்த ஒரே தேவதையான உலகத்தின் காரணங்களால் பிரதிபாதனம்

செய்யப்படுகிறவராயும், ஜகத்திற்கெல்லாம் நாதனையும் எங்கும் வியாபித்திருக்கிற அந்த ஸ்ரீ தேவதையின் அனுக்கிருக ரூபமான ஸமஸ்த பாபங்களையும் போக்குகின்ற ஆயிரம் நாமாக்களை என்னிடமிருந்து சிரத்தையுடன் கேளும்.

यानि नामानि गौणानि विख्यातानि महात्मनः ।
ऋषिभिः परिगीतानि तानि वक्ष्यामि भूतये ॥ १३ ॥

மனதால் சிந்திக்கமுடியாத பிரபாவத்தையுடைய அந்த தேவதையின் யாவையொரு நாமதேயங்கள் குணங்களின் சேர்க்கையாலுண்டானவைகளோ, மஹர்ஷிகளால் ஸங்கீர்த்தனம் செய்யப்பட்டவைகளோ, அவைகளை நான்கு வித புருஷார்த்தங்களையும் கோருகிறவர்களுக்கு அவைகள் விருத்தியாகும்பொருட்டுச்சொல்லுகிறேன்.

ओम् ॥

विश्वं विष्णुर्वषट्कारो भूतभव्यभवत्प्रभुः ।
भूतकृद्भूतभृद्भावो भूतात्मा भूतभावनः ॥ १४ ॥

## **विश्वम् ॥ १ ॥**

1. "விச்வம்" என்றால் ஜகத். பரமாத்மா ஜகத்திற்குக் காரணரானபடியால் அவரை முத

வின் "விசுவம்" என்று சொல்லப்பட்டது. பரமாத்மா காரணர். ஜகத் கார்யம். முதலில் கார்யத்தால் காரணப் பெயர் சொல்வதால் கார்யங்களான பிரம்மா முதலானவர்களின் நாமாக்களால் பரமாத்மாவை ஸ்துதி செய்யலாமென்று காண்பிக்கப்பட்டது.

2. உண்மையில் பரம புருஷனைக்காட்டிலும் இந்த ஜகத்தானது பின்னமில்லை. அதாவது பரமாத்மாவின் ஸ்வரூபம்தான் என்று காண்பிக்க விசுவம் என்று சொல்லப்பட்டது. ब्रह्मैवेदं विश्वमिदं वरिष्ठं पुरुष एवेदं विश्वम् என்று சுருதி.

3. கார்யபூதமான ஸகலமான ஜகத்திலும் பிரவேசிக்கிறார். ஸகல ஜகத்தும் அவரையே பிரவேசிக்கின்றன. तत् सृष्ट्वा तदेवानुप्राविशत् । यत्प्रयन्ति अभिसंविशन्ति । என்று சுருதி.

4. विश्वम् என்ற பதத்திற்கு ओम् என்று அர்த்தம். ஏனென்றால் பிரணவத்திற்குத்தான் பிரம்மம் என்று அர்த்தம். सर्वे वेदा यत्पदमामनन्ति तपांसि सर्वाणि च यद्वदन्ति यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण ब्रवीमि ओमित्येतत् एतद्ध्येवाक्षरं ब्रह्म एतद्ध्येवाक्षरं परम् । एतद्ध्येवाक्षरं ध्यात्वा यो

यदिच्छति तस्य तत् ॥ ओमिति ब्रह्म— ओमितीदं सर्वम् என்று முதலான சுருதிகள் रसोऽहमप्सु कौन्तेय प्रभास्मि शशिसूर्ययोः । प्रणवः सर्ववेदेषु गिरामस्म्येकमक्षरम् ॥ என்று கீதை. किमेकं दैवतं लोके என்ற முதலான வாக்கியங்களால் ஒரே தேவதையான பிரம்மம் யாதொன்று சொல்லப்பட்டதோ அதோ विश्वम् என்ற சப்தத்தால் சொல்லப்பட்டது என்று மேலே சொன்னோம். இப்பொழுது ஏன் அப்படிச் சொல்லவேணுமென்று சொல்லுகிறார்.

## विष्णुः ॥ २ ॥

1. தேசம், காலம், வஸ்து பரிச்சேதராஹிதராய் எங்கும் வியாபித்திருக்கிறவர்.

व्याप्ता मे रोदसी पार्थ कान्तिश्चाभ्यधिकस्तथा । क्रमणाच्चाप्यहं पार्थ विष्णुरित्यभिसंज्ञितः ॥ என்று மஹாபாரதம்.

यच्च किंचित् जगत्सर्वं दृश्यते श्रूयतेऽपि वा । अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः ॥ என்று சுருதி.

सर्वभूतस्थमेकं नारायणं कारकरूपमेकाकारं परं ब्रह्म शोकमोहविनिर्मुक्तं विष्णुं ध्यायन्नासीदति । என்று ஆத்மபோதோபநிஷத்.

2. यस्माद्विश्वमिदं सर्वं तस्य शक्त्या महात्मनः तस्मादेवोच्यते विष्णुर्विशेर्धातोः प्रवेशनात् ॥ என்று விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடியால் ஸகல பூதங்களில் பிரவேசிக்கிறவர் என்று அர்த்தம்.

## वषट्कारः ॥ ३ ॥

1. பரம புருஷனை உத்தேசித்து வஷட் கிரியைச் செய்யப்படுகிறபடியால் அவருக்கு वषट्कारः என்று நாமம். அதாவது யாகங்களில் செய்யப்படும் ஹோமங்களுக்கு உத்தேசியமாயிருக்கிறவர்.

2. यज्ञो वै विष्णुः என்று சுருதி சொல்லுகிற படியால் விஷ்ணுஸ்வரூபமான யக்ஞத்தில் வஷட்கிரியைச் செய்யப்படுகிறபடியால் அவருக்கு அந்தப் பெயர். அதாவது யாகரூபி.

3. வஷட்காரம் முதலான மந்திரரூபியாய் தேவதைகளைப் பிரீதி செய்கிறவர்.

4. வஷட்காரம் என்ற மந்திர தேவதாரூபி.

## भूतभव्यभवत्प्रभुः ॥ ४ ॥

இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் இவைகளுக்கு ஈசுவரர், அதாவது காலபேதத்தை யபேக்ஷியாமல் பரம புருஷனுடைய ஐசுவரியமானது ஏத்தாகவே இருக்கிறது என்று அர்த்தம்.

## भूतकृत् ॥ ५ ॥

ரஜோகுணத்தை ஆச்ரயித்துப் பிரம்ம ரூபியாயிருந்து பிராணிகளை ஸ்ருஷ்டிக்கிறவர்.

## भूतभृत् ॥ ६ ॥

ஸத்வகுணத்தை ஆச்ரயித்துப் பிராணிகளைக் காப்பாற்றுகிறவர் போஷிக்கிறவர்.

## भावः ॥ ७ ॥

1. ப்ரபஞ்ச ரூபியாயிருக்கிறவர்.

2. ஸத்தாமாத்திரர்.

## भूतात्मा ॥ ८ ॥

एष त अन्तर्यामी என்று சுருதியில் சொல்லியபடி பூதங்களில் அந்தர்யாமியாயிருக்கிறவர்.

## भूतभावनः ॥ ९ ॥

பிராணிகளை உண்டுபண்ணுகிறவர் அல்லது விருத்திசெய்கிறவர்.

पूतात्मा परमात्मा च मुक्तानां परमा गतिः ।
अव्ययः पुरुषः साक्षी क्षेत्रज्ञोऽक्षर एव च ॥ १६ ॥

## पूतात्मा ॥ १० ॥

भूतकृत् முதலான பதங்களால் பரமபுருஷனுக்குக் குணஸங்கிரத்துவம் ஏற்படுகிறது. அதை நிஷேதிக்கிறார். पूतात्मा பரிசுத்தஸ்வபாவர். साक्षी चेता केवलो निर्गुणश्च என்று சுருதி.

## परमात्मा ॥ ११ ॥

கார்ய காரணங்களைக் காட்டிலும் விலக்ஷணராய் நித்ய சுத்த புத்த முக்தஸ்வபாவர்.

## मुक्तानां परमा गतिः ॥ १२ ॥

ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டவர்களுக்கு மறுபடி கர்மபூமியில் ஜன்மம் எடுக்காமலிருக்கும்படி சரணமடையத்தக்கது பிரகிரு

ஏற்படமான தேகமவை. वासुदेवस्तु कैरपेज पूज्यैश्च न क्रियते। என்று பகவத்கீதை.

## अव्ययः ॥ १३ ॥

வ்யயமாவது, விகாரமாவது இல்லாதவர். अजरोऽमरः என்று சுருதி.

## पुरुषः ॥ १४ ॥

1. नवद्वारं पुरं पुण्यमेतैर्भावैः समन्वितम्। व्याप्य शेते महात्मा यस्तस्मात्पुरुष उच्यते। என்று மஹாபாரதத்தில் சொல்லியபடி ஒன்பது த்வாரங்களுடன் கூடிய நகரஸ்வரூபமான சரீரத்தில் சயனித்திருக்கிறவர். நேத்திரங்கள் 2, செவிகள் 2, நாஸிகாத்வாரங்கள் 2, முகம் 1, பாயு 1, உபஸ்தம் 1, ஆக ஒன்பது த்வாரங்களுடன் கூடின சரீரமானது நகரம் என்று சொல்லப்பட்டது.

2 पूर्वमेवाहमिहासमिति तत्पुरुषस्य पुरुषत्वम् என்று சுருதியில் சொல்லியிருக்கிறபடி ஆதியிலேயே இருந்தவர். 3. உத்கர்ஷமான பிராணிகளில் இருப்பவர். 4. புண்யங்களைப் பிரளயகாலத்தில் அழிக்கிறவர். 5. पूरणात्सदनाच्चैव ततोऽसौ पुरुषोत्तमः என்று மஹாபாரதத்தில் சொல்லியபடி எங்கும் பரிபூர்ணர். எங்குமிருப்பவர்.

## साक्षी ॥ १५ ॥

ஸகலத்தையும் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கிறவர்.

## क्षेत्रज्ञः ॥ १६ ॥

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत என்று பகவத்கீதையிலும் क्षेत्राख्यानि शरीराणि तेषां चैव यथा सुखम् । तानि वेत्ति स योगात्मा ततः क्षेत्रज्ञ उच्यते ॥ என்று பிரம்மபுராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறபடி சரீரத்தை அறிகிறவர்.

## अक्षरः ॥ १७ ॥

அழிவில்லாத பரமாத்மா, एवं என்ற பதத்தால் க்ஷேத்திரக்ஞனான ஜீவாத்மாவும், அக்ஷரனான பரமாத்மாவும் ஒன்றே என்று காண்பிக்கப்பட்டது. च என்ற பதமானது வியாவஹாரிக பேதத்தைக் காண்பிக்கின்றது.

योगो योगविदां नेता प्रधानपुरुषेश्वरः ।
नारसिंहवपुः श्रीमान् केशवः पुरुषोत्तमः ॥ १६ ॥

## योगः ॥ १८ ॥

ज्ञानेन्द्रियाणि सर्वाणि निरुध्य मनसा सह ।
एकत्वभावना योगः क्षेत्रज्ञपरमात्मनोः ॥

மனதுடன் ஸகல இந்திரியங்களையும் அடக்கி க்ஷேத்ரஜ்ஞன், பரமாத்மா இவர்களின் ஐக்கியத்தின் தியானம்தான் யோகம். அந்த யோகத்தினால் அடையப்படுகிறவர்.

## योगविदां नेता ॥ १९ ॥

மேற்சொன்னபடி யோகத்தையறிந்தவர்களான ஞானிகளின் யோகக்ஷேமத்தை வஹிக்கிறவர்.

## प्रधानपुरुषेश्वरः ॥ २० ॥

பிரகிருதி அதாவது மாயை, ஜீவன், இவர்களுக்கு ஈசன்.

## नारसिंहवपुः ॥ २१ ॥

மனிதனுடையவும், ஸிம்மத்தினுடையவும் அவயவங்களையுடையவர்.

## श्रीमान् ॥ २७ ॥

எப்பொழுதும் லக்ஷ்மீதேவி வஸிக்கும் மார்பையுடையவர்.

## केशवः ॥ २३ ॥

1. அழகான கேசங்களையுடையவர், 2. பிரம்மா விஷ்ணு ருத்திரர்களான திரிமூர்த்தி

உயிரையும் பறித்திட்டவர் 3. यस्मात्त्वयैव दुष्टात्मा हतः केशी जनार्दन । तस्मात्केशवनाम्ना त्वं लोके ज्ञेयो भविष्यसि ॥ என்று விஷ்ணு புராணத்தில் சொல்லியபடி கேசி என்ற அஸுரனை வதம் செய்தவர்.

## पुरुषोत्तमः ॥ २४ ॥

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः । अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ என்று பகவத்கீதையில் சொல்லியபடி க்ஷரமான பூதங்கள், அக்ஷரமான மாயை இவைகளைக் காட்டிலும் உத்க்ருஷ்டர்.

सर्वः शर्वः शिवः स्थाणुर्भूतादिर्निधिरव्ययः ।
संभवो भावनो भर्ता प्रभवः प्रभुरीश्वरः ॥ १७ ॥

## सर्वः ॥ २५ ॥

असतश्च सतश्चैव सर्वस्य प्रभवाप्ययौ । सर्वस्य सर्वदा ज्ञानात् सर्वमेनं प्रचक्षते ॥ என்ற வியாஸவசனத்தால் ஸகலத்தையும் அறிகிறவரானபடியால் ஸர்வர்.

## शर्वः ॥ २६ ॥

ஸகலப் பிரஜைகளையும் ஸம்ஹரிக்கிறவர்.

## शिवः ॥ २७ ॥

ஸத்வரஜஸ்தமோ குணங்களில்லாமல் நித்ய சுத்த புத்த முக்த ஸ்வபாவர். स ब्रह्मा स शिवः

அந்தப் பரமாத்மாவே பிரம்மா. அவரே சிவர் என்றபடி சிவகாமக்களால் விஷ்ணுவே ஸ்தோத்திரம் செய்யப்பட்டார்.

## स्थाणुः ॥ २८ ॥

எப்பொழுதும் நாசரஹிதராய் ஸ்திரமாயிருப்பவர்.

## भूतादिः ॥ २९ ॥

காரியங்களான பூதங்களுக்குக் காரணமானதால் அவைகளுக்கெல்லாம் ஆதியானவர்.

## अव्ययो निधिः ॥ ३० ॥

பிரளயகாலத்தில் ஸகலப்பிராணிகளையும் அழிவின்றி நிதிபோல் தன்னிடத்தில் வைத்துக்கொண்டிருக்கிறவர்.

## सम्भवः ॥ ३१ ॥

रक्षणार्थं च साधूनां विनाशाय च दुष्कृताम् । धर्मसंस्थापनार्थाय सम्भवामि युगे युगे ॥ என்றபடி துஷ்டர்களின் நிக்கிரஹத்தின் பொருட்டும் சிஷ்டர்களின் பரிபாலனத்தின் பொருட்டும், தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டும் ஸ்வேச்சையாய் அவதரிக்கிறவர்.

## भावनः ॥ ३२ ॥

பலனை அபேக்ஷித்துத் தன்னை உபாஸிக்கிறவர்களுக்குக் கோரின பலனைத் தருகிறவர்.

## भर्ता ॥ ३३ ॥

பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானராயிருந்து அதைத்தரிக்கிறவர்.

## प्रभवः ॥ ३४ ॥

1. மஹா பூதங்களின் உத்பத்திக்கு முக்கிய காரணமாயிருக்கிறவர். 2. சிரேஷ்டமான ஜன்மாவையுடையவர்.

## प्रभुः ॥ ३५ ॥

ஸகல கிரியைகளிலும் அதிசயமான ஸாமர்த்தியத்தையுடையவர்.

## ईश्वरः ॥ ३६ ॥

एष सर्वेश्वरः என்று சுருதியில் சொல்லியபடி நிருபாதிகமான ஐசுவரியத்தையுடையவர்.

स्वयंभूः शंभुरादित्यः पुष्कराक्षो महास्वनः ।
अनादिनिधनो धाता विधाता धातुरुत्तमः ॥ १८ ॥

## स्वयम्भूः ॥ ३७ ॥

1. स एवं स्वयमुद्भवत् என்று மனுவசனத்தால் தானாய் உண்டானவர் 2. परिभूः स्वयंभूः என்ற மந்திரவர்ணத்தால் எல்லாவற்றிற்கும் மேலாக விளங்குகிறவர்.

## शम्भुः ॥ ३८ ॥

தன் பக்தர்களுக்கு ஸுகத்தைத்கொடுக்கிறவர்.

## आदित्यः ॥ ३९ ॥

1. ஸூர்யமண்டலத்திலிருக்கிற ஹிரண்மயரான புருஷர் 2. आदित्यानामहं विष्णुः என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் துவாதசாதித்தியர்களுக்குள் விஷ்ணுவாயிருக்கிறவர். 3. इयं त्वा अदितिः मही देवी विष्णुपत्नीम् என்று சுருதியில் சொல்லியிருக்கிறபடி பூமிதேவியின் பதி. 4 ஸூர்யனைப்போலிருக்கிறவர் அதாவது ஸூர்யன் ஒருவனே அனேக ஜலபாஜனங்களில் அனேக ஸூர்யனாக எப்படிக் காணப்படுகிறானோ அப்படியே இந்தப்பரமாத்மா ஒருவரே உபலப்திஸ்தானமான தேஹங்களில் அனேகர் போல் காணப்படுகிறார்.

## पुष्कराक्षः ॥ ४० ॥

தாமரைப்பூப்போல் அழகான நேத்திரங்களையுடையவர்.

## महास्वनः ॥ ४१ ॥

ஊர்ஜிதமான சப்தம் அல்லது ச்ருதி ரூபமான நாதத்தையுடையவர். अस्य महतो भूतस्य निःश्वसितमेतदृग्वेदो यजुर्वेदः என்று ச்ருதி.

## अनादिनिधनः ॥ ४२ ॥

ஜனனம் விநாசம் இவை இல்லாதவர்.

## धाता ॥ ४३ ॥

1. அனந்தர் முதலான ரூபங்களால் விச்வத்தைத் தரிக்கின்றவர்: 2. கர்மாக்கள், அவைகளின் பலன்கள் இவைகளுக்குக் கர்த்தா.

## विधाता ॥ ४४ ॥

விச்வத்தைத்தரிக்கின்ற அனந்தர் முதலானவர்களையும் தரிக்கிறவரானபடியால் விசேஷமாய் ஜகத்தையும் தரிக்கின்றவர்.

## धातुरुत्तमः ॥ ४५ ॥

1. பிருத்வீ முதலான தாதுக்களைக்காட்டிலும் உத்தமமான சித்தாது. 2. பிரம்மனைக்

காட்டிலும் சிரேஷ்டர் அல்லது धातु: என்று ஒரு நாமா, उत्तम: என்று ஒரு நாமா, கார்ய காரண பிரபஞ்சத்தைத் தரிக்கிறபடியினாலேயே धातु: என்று பெயர் उत्तम: ஸகலரையும் அபேக்ஷித்து உத்கிருஷ்டர்.

अप्रमेयो हृषीकेशः पद्मनाभोऽमरप्रभुः ।
विश्वकर्मा मनुस्त्वष्टा स्थविष्ठः स्थविरो ध्रुवः ॥ १९ ॥

## अप्रमेयः ॥ ४७ ॥

பிரமாணங்களால் அறியப்படாதவர். பிரமாணங்கள்-பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், அர்த்தாபத்தி, சாஸ்திரம் என ஐந்துவகை.

ஸாக்ஷாத்தாய் காண்பதுதான் பிரத்தியக்ஷம். புகையைக் கண்டு அக்னி இருப்பதாக ஊகிப்பதுபோல் ஒரு தர்மத்தால் மற்றொன்று இருக்கிறது என்று நிச்சயம் கொள்ளுதல் அநுமானம். சந்திரனைப்போல் முகம் என்று சொல்வது உபமானம். ஒன்று இல்லாமல் ஒன்று இராது என்பது அர்த்தாபத்தி. சாஸ்திரங்களிற் சொல்வது சாஸ்திரமென்று அறிக. இப்பொழுது எந்தப் பிரமாணத்திற்குள்ளவது பரமாத்மாவை விஷயமாகச் சொல்லலாமென்று பார்ப்போம். சப்தம், ஸ்பர்சம், ரூபம் முதலான

குணங்களிருக்கும் வஸ்துவைத்தான் நாம் இந்திரியங்களால் கிரஹிக்கின்றோம். பரமாத்மாவோ குணரஹிதர். ஆகையால் பிரத்தியக்ஷப்பிரமாணத்திற்கு விஷயராகமாட்டார். இது இப்படி இருக்கிறபடியால் அதோ பரமாத்மா இருக்கிறார் என்று ஊஹிக்கவுமிடமில்லை. ஏனென்றால் அவருக்கு யாதொரு அடையாளமுமில்லை. ஆகையால் பரமாத்மா அனுமான விஷயரல்ல. ஒரு பதார்த்தத்தை ஒரு பதார்த்தத்திற்கு உபமானமாகச் சொன்னால் அது உபமேயத்திற்கு மேலாக இருக்கவேண்டியது என்பது நியாயம். பரமாத்மாவுக்கு மேலான வஸ்து ஒன்றுமில்லை. தவிரவும் தர்மமிருந்தால் தான் உபமானம் ஸித்தியாகும். பரமாத்மாவுக்கு யாதொரு தர்மமுமில்லாதபடியால் உபமானத்திற்கும் விஷயரல்ல. பரமாத்மா இல்லாமல் உபபன்னமாயிராது ஆகையால் அர்த்தாபத்தி விஷயரல்ல. சாஸ்திரத்தைப் பிரமாணமாகச் சொல்லலாமென்றால் பிரமாணத்தாலுண்டான அதிசயம் ஒன்றுமில்லை. ஆனால் பிரம்மஸூத்திரத்தில் शास्त्रयोनित्वात् என்று சொல்லப்பட்டிருக்கிறதே. அதற்கு என்ன உத்தரம் என்றால்—பரமாத்மா நிர்குணரானபடியாலும் ஸ்வயம் பிரகாசரான

தாலும் பிரமாணப் பிரமேயங்களுக்கெல்லாம் ஸாக்ஷியராயிருப்பதாலும் அவர் பிரமாணங்களுக்கு விஷயரல்லாதவராயிருக்கும் பிரமாணத்திற்கு விஷயர் என்று சொல்லுவது மூடர்களுடைய அக்ஞானத்தை நிவிர்த்தி செய்வதில் சாஸ்திரம் பிரமாணம்.

## हृषीकेशः ॥ ४७ ॥

1. க்ஷேத்திரக்ஞராயும், ஸர்வ ஸாக்ஷியாயுமிருப்பதால் இந்திரியங்களுக்கு ஈசர். அதாவது இந்திரியங்களால் செய்யப்படும் கார்யங்களை ஸாக்ஷியாய்ப் பார்த்துக்கொண்டிருக்கிறவர். 2. இந்திரியங்களைத் தன் வசத்தில் வைத்திருப்பவர். 3. ஜகத்திற்குப் பிரீதிகரங்களான கிரணங்களையுடைய ஸூர்யரூபராயும் சந்திரரூபராயுமிருக்கிறவர்.

सूर्याचन्द्रमसौ शश्वदंशुभिः केशसंज्ञितैः ।
बोधयन्स्वापयंश्चैव जगदुत्तिष्ठते पृथक् ॥
बोधनात्स्वापनाच्चैव जगतो हर्षणं भवेत् ।
अग्नीषोमकृतैरेवं कर्मभिः पाण्डुनन्दन ॥
हृषीकेशोऽहमीशानो वरदो लोकभावनः ।

என்று மோக்ஷ தர்மத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## स्थविरो ध्रुवः ५४

ஸ்திரமாயும், புராணமாயுமிருக்கிறவர். “ स्थेय स्थस्य स्थविरस्य नाम ” என்று சுருதி.

अग्राह्यः शाश्वतः कृष्णो लोहिताक्षः प्रतर्दनः ।
प्रभूतस्त्रिककुब्धाम पवित्रं मङ्गलं परम् ॥ ७ ॥

## अग्राह्यः ॥ ५५ ॥

“ यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह ” என்று சுருதியில் சொல்லியபடி இந்திரியங்களால் கிரஹிக்கப்படாதவர்.

## शाश्वतः ॥ ५६ ॥

“ शाश्वतं शिवमच्युतम् ” என்று சுருதியில் சொல்லியபடி எக்காலத்திலுமிருக்கிறவர்.

## कृष्णः ॥ ५७ ॥

1. कृषिर्भूवाचकः शब्दो णश्च निर्वृतिवाचकः । विष्णुस्तद्भावयोगाच्च कृष्णो भवति शाश्वतः ॥ என்ற வியாஸ வசனத்தால் பூமிக்கு எப்பொழுதும் ஸௌக்கியத்தைக் கொடுக்கிறவர். அதாவது ஸச்சிதானந்தரூபர். 2. கிருஷ்ண வர்ணத்தையுடையவர். “ कृष्णवर्णश्च मे यस्मात्तस्मात्कृष्णोऽहमर्जुन ” என்று மஹாபாரதம்.

## लोहिताक्षः ॥ ५८ ॥

"स मा वृषभो लोहिताक्षः" என்று சுருதியில் சொல்லியபடி சிவப்பான நேத்திரங்களையுடையவர்.

## प्रतर्दनः ॥ ५९ ॥

பிரளயத்தில் பூதங்களை ஹிம்ஸிக்கிறவர்.

## प्रभूतः ॥ ६० ॥

ஞானம், ஐசுவர்யம் முதலானவைகளுடன் கூடியவர்.

## त्रिककुब्धाम ॥ ६१ ॥

மேல் கீழ், மத்தியம் இந்த மூன்று திக்குகளுக்கும் இருப்பிடமாயிருக்கிறவர்.

## पवित्रम् ॥ ६२ ॥

1. பரிசுத்தர். 2. வஜ்ராயுதத்தினின்று காப்பாற்றுகிறவர் அதாவது அரிஷ்ட நிவர்த்தகர்.

## मङ्गलं परम् ॥ ६३ ॥

"अशुभानि निराचष्टे तनोति शुभसन्ततिम् ।
स्मृतिमात्रेण यत्पुंसां ब्रह्म तन्मङ्गलं विदुः" ॥

என்று விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடியால் ஸகல பூதங்களையும் அபேக்ஷித்து விசிஷ்ட மங்களஸ்வரூபர்.

ईशानः प्राणदः प्राणो ज्येष्ठः श्रेष्ठः प्रजापतिः ।
हिरण्यगर्भो भूगर्भो माधवो मधुसूदनः ॥ २१ ॥

## ईशानः ॥ ६४ ॥

ஸகல பூதங்களுக்கும் நியந்தா.

## प्राणदः ॥ ६५ ॥

பிராணன்களை நடத்துகிறவர். "को ह्येवान्यात् कः प्राण्यात्" என்று சுருதி. 2. காலாத்மகரா யிருந்து பிராணன்களைக் கண்டனம் செய்கிறவர். 3. பிராணன்களைப் பரிசுத்தம் செய்கிறவர்.

## प्राणः ॥ ६६ ॥

1. க்ஷேத்திரக்ஞன் அல்லது பரமாத்மா 2. "प्राणस्य प्राणम्" என்ற சுருதியால் முக்கியமான பிராணன்.

## ज्येष्ठः ॥ ६७ ॥

1. மிகவும் பெரியவர்.

## श्रेष्ठः ॥ ६८ ॥

ஸகலத்தையும் அதிசயித்து சிரேஷ்டரா யிருக்கிறவர்.

## प्रजापतिः ॥ ६९ ॥

[illegible]
கும் சகர்.

## हिरण्यगर्भः ॥ ७० ॥

பிரம்மஸ்வரூபராய் ஹிரண்மயமான அண்டத்திலிருப்பவர். "हिरण्यगर्भः समवर्तताग्रे" என்று ச்ருதி.

## भूगर्भः ॥ ७१ ॥

பூமியைக் கர்ப்பத்திலுடையவர். அதாவது பூமியை இருதயத்திலுடையவர்.

## माधवः ॥ ७२ ॥

1. லக்ஷ்மீபதி. 2. மதுவித்தையால் அறியப்படுகிறவர். "मौनाद्ध्यानाच्च योगाच्च विद्धि भारत माधवम्" மௌனத்தாலும், தியானத்தாலும், யோகத்தினாலும் மாதவனை அறி என்று வியாஸ வசனம்.

## मधुसूदनः ॥ ७३ ॥

மது என்ற அஸுரனை வதம் செய்தவர்
"कर्णमिश्रोद्भवं चापि मधुनाममहासुरम् ।
ब्रह्मणोपचितिं कुर्वञ्जघान पुरुषोत्तमः ॥
तस्य तात वधादेव देवदानवमानवाः ।
मधुसूदन इत्याहुर्ऋषयश्च जनार्दनम् ॥

என்று மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ईश्वरो विक्रमी धन्वी मेधावी विक्रमः क्रमः ।
अनुत्तमो दुराधर्षः कृतज्ञः कृतिरात्मवान् ॥ २२ ॥

## ईश्वरः ॥ ७४ ॥

ஸர்வ சக்தியுள்ளவர்.

## विक्रमी ॥ ७५ ॥

சௌர்யஸம்பன்னர்.

## धन्वी ॥ ७६ ॥

'रामः शस्त्रभृतामहम्' என்ற பகவத்வசனத்தால் சிரேஷ்டமான சார்ங்கம் என்ற வில்லையுடையவர்.

## मेधावी ॥ ७७ ॥

அநேக கிரந்தங்களைத் தரிக்கும்படியான ஸ்வபாவஸித்தமான புத்தியையுடையவர்.

## विक्रमः ॥ ७८ ॥

1. ஜகத்தை ஆக்கிரமித்திருக்கிறவர். (2) தன் வாஹனமான கருடனைக்கொண்டு செல்லுகிறவர்.

## क्रमः ॥ ७९ ॥

(1) எங்கும் வியாபித்திருக்கிறவர். (2) எங்கும் வியாபித்திருப்பதற்குக் காரண பூதர்.

## अनुत्तमः ॥ ८० ॥

“यस्मात्परं नापरमस्ति किंचित्” என்று சுருதியில் சொல்லியபடி தனக்கு மேல் ஒன்றுமில்லாதவர். “न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यः” என்று கீதை.

## दुराधर्षः ॥ ८१ ॥

(1) ஸமுத்திரம் போல் அஸுரர்களால் கலக்கமுடியாதவர்.

## कृतज्ञः ॥ ८२ ॥

பிராணிகளால் அநுஷ்டிக்கப்பட்ட புண்ணிய பாபரூபமான கர்மாக்களை ஸாக்ஷாத்தாய் அறிகிறவர். (2) பக்தர்களால் சிரத்தையுடன் அர்ப்பணம் செய்யப்படும் பத்திரம், புஷ்பம், பலம், தோயம், இவைகளாலேயே திருப்தியடைந்து அவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கிறவர்.

## कृतिः ॥ ८३ ॥

(1) புருஷப்பிரயத்தனமாயிருக்கிறவர்.

அல்லது கிரியையா யிருக்கிறவர். (2) கர்மாவை அநுஷ்டிக்கிறவர்களுடைய புருஷப்பிரயத்தனம் கிரியை, இவைகளுக்கு ஆதாரபூதர்.

## आत्मवान् ॥ ८४ ॥

"स भगवः कस्मिन्प्रतिष्ठित इति स्वे महिम्नि" என்ற சுருதியில் சொல்லியபடி தன்னுடைய மஹிமையில் பிரதிஷ்டித்திருப்பவர்.

सुरेशः शरणं शर्म विश्वरेताः प्रजाभवः ।
अहः संवत्सरो व्यालः प्रत्ययः सर्वदर्शनः ॥ २२ ॥

## सुरेशः ॥ ८५ ॥

(1) தேவர்களுக்கெல்லாம் ஈசன். (2) மங்களத்தைக் கொடுக்கிறவர்களுக்கெல்லாம் ஈசன்.

## शरणम् ॥ ८६ ॥

(1) பீடிக்கப்பட்டவர்களின் பீடையைப் போக்குகிறவர். அதாவது உபாஸனையால் பயம், துக்கம், பாபம், பந்தம் இவைகளண்டாமல் ஸ்திரமான ஸுகம்-ஞானம் இவைகளைக் கொடுக்கிறவர்.

## शर्म ॥ ८७ ॥

பரமானந்த ரூபர்.

## विश्वरेताः ॥ ८८ ॥

விசுவத்திற்குக் காரணர்.

## प्रजाभवः ॥ ८९ ॥

தன்னிடத்திலிருந்து பிரஜைகள் உண்டாகிறபடியால் "பிரஜாபவர்." அதாவது பிரஜைகளின் உத்பத்திக்குக் காரணபூதர்.

## अहः ॥ ९० ॥

அக்ஞான நித்திரையில்லாமல் ஸ்வயம்பிரகாசராயிருக்கிறவர்.

## संवत्सरः ॥ ९१ ॥

காலாத்மகராயிருக்கிற விஷ்ணு.

## व्यालः ॥ ९२ ॥

ஸர்பம் போல் கிரஹிக்க முடியாதவர் அதாவது யாருக்கும் வசப்படாமல் ஸ்வதந்திரராயிருக்கிறவர்.

## प्रत्ययः ॥ ९३ ॥

"प्रज्ञानं ब्रह्म" என்று சுருதியில் சொல்லியபடி பிரதீதி அதாவது பிரக்ஞானரூபர்.

## सर्वदर्शनः ॥ ९४ ॥

"विश्वतश्चक्षुर्विश्वाक्षम्" என்று சுருதியில் சொல்லியபடி ஸர்வாத்மகரானபடியால் ஸகலத்தையும் பிரத்தியக்ஷமாயுடையவர். அல்லது எல்லாவற்றையும் நேத்திரங்களாயுடையவர்.

अजः सर्वेश्वरः सिद्धः सिद्धिः सर्वादिरच्युतः ।
वृषाकपिरमेयात्मा सर्वयोगविनिःसृतः ॥ १४ ॥

## अजः ॥ ९५ ॥

"न जातो न जानिष्यते" என்று சுருதியில் சொல்லியபடி ஜனனமில்லாதவர். "न हि जातो न जायेय न जानिष्ये कदाचन । क्षेत्रज्ञः सर्वभूतानां तस्मादहमजः स्मृतः" ॥ என்று மஹாபாரதம்.

## सर्वेश्वरः ॥ ९६ ॥

"एष सर्वेश्वरः" என்று சுருதியில் சொல்லியபடி ஈசுவரர்களுக்கெல்லாம் ஈசுவரர்.

## सिद्धः ॥ ९७ ॥

நித்ய நிஷ்பன்னர். அதாவது பரிபூர்ணமான ஸர்வகாமங்களையுடையவர். எதிலும் நிரபேக்ஷையாயிருக்கிறவர்.

## सिद्धिः ॥ ९८ ॥

ஸகல வஸ்துக்களிலும் ஸம்வித் ரூபமாயும்

கீர்த்திசயராயும், பல (फल) ரூபராயும் இருக்கிறவர். ஸ்வர்க்கம் முதலியவை அநித்யமானபடியால் அவை பலனுடன் கூடியவையல்ல.

## सर्वादिः ॥ ९९ ॥

ஸமஸ்த பூதங்களுக்கும் ஆதிகாரணர்.

## अच्युतः ॥ १०० ॥

"शाश्वतं शिवमच्युतम्" என்று சுருதியில் சொல்லியபடி ஸ்வரூப ஸாமர்த்தியத்திலிருந்து நழுவாதவர். "यस्मान्न च्युतपूर्वोऽहमच्युतस्तेन कर्मणा" என்று பகவத் வசனம்.

## वृषाकपिः ॥ १०१ ॥

தர்ம ஸ்வரூபராயும் வராஹரூபராயுமிருக்கிறவர். वृषः என்றால் தர்மரூபர். தர்மந்தான் ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கின்றது. कपिः என்றால் ஜலத்திலிருந்தும் பூமியை வராஹ ரூபியாய்க் காப்பாற்றினவர். "कपिर्वराहः श्रेष्ठश्च धर्मश्च वृष उच्यते । तस्माद्वृषाकपिं प्राह काश्यपो मां प्रजापतिः" ॥ என்று வியாசவசனம்.

## अमेयात्मा ॥ १०२ ॥

இவ்வளவு என்று அளவிடக்கூடாத ஸ்வ

பாவத்தையுடையவராய் எல்லாவற்றையும் அபே க்ஷித்து உத்கிருஷ்டராயிருப்பவர்.

## सर्वयोगविनिःसृतः ॥ १०३ ॥

ஸகல ஸம்பந்தங்களிலிருந்தும் விடுபட்ட வர். "असङ्गो ह्ययं पुरुषः" என்று ச்ருதி. (2) ஸகல சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்ட உபாயங்க ளால் அறியப்படுகிறவர்.

वसुर्वसुमनाः सत्यः समात्मासंमितः समः ।
अमोघः पुण्डरीकाक्षो वृषकर्मा वृषाकृतिः ॥ २५ ॥

## वसुः ॥ १०४ ॥

1. ஸகலப்பிராணிகளும் பரமாத்மாவிடத் தில் வசிக்கின்றன. பரமாத்மாவும் ஸகலப்பிரா ணிகளிடத்திலும் வசிக்கிறார். ஆகையால் वसु என்று பெயர். 2. वसूनामस्मि पावकः என்ற கீதை யில் சொல்லியபடி வஸுக்களுள் அக்நிஸ்வரூ பர்.

## वसुमनाः ॥ १०५ ॥

वसु என்றால் தனம். வஸு என்ற பதமா னது இவ்விடத்தில் சிரேஷ்ட வாசகம். சிரேஷ் டமான மனதையுடையவர். ராகம், துவேஷம் முதலான கிலேசங்களால் கொஞ்சங்கூடக் கல

க்கத்தை யடையாத மனதை யுடையவராகையால் ஸ்ரேஷ்டமான மனதையுடையவர் என்று சொல்லப்பட்டது.

## सत्यः ॥ १०६ ॥

1, ஸத்யஸ்வரூபர். "सत्यं ज्ञानमनन्तं ब्रह्म" என்று ச்ருதி. (2) மூர்த்தராயும், அமூர்த்தராயுமிருக்கிறவர். "सच्च त्यच्चाभवत्" என்று ச்ருதி. (3) सत् என்றால் பிராணன்; ति என்றால் அன்னம், यम् என்றால் ஸூர்யன். இதனால் பிராணன், அன்னம், ஆதித்யன், இந்த ரூபியாயிருக்கிறவர். "सदिति प्राणस्तीत्यन्नं यमित्यसावादित्यः" என்று ச்ருதி. (4) ஸாதுக்களிடத்தில் ஸாதுவாயிருக்கிறவர்.

## समात्मा ॥ १०७ ॥

1. ஸமமான சித்தத்தை யுடையவர். அதாவது ராகம், த்வேஷம் இவைகளால் ஒரு பொழுதும் கலங்காத சித்தத்தை யுடையவர். (2) "सम आत्मेति विद्यात्" என்று ச்ருதியில் சொல்லியபடி ஸமஸ்தப் பிராணிகளிடத்திலுமிருக்கிற ஒரே பரமாத்மா.

## संमितः அல்லது असंमितः ॥ १०८ ॥

संमित: ஸகல வஸ்துக்களாலும் பரிச்சின்ன ராயிருக்கிறவர். असंमित: எதனாலும் பரிச்சேதம் செய்ய முடியாதவர்.

## समः ॥ १०९ ॥

1. ஸர்வகாலங்களிலும் ஸர்வவிகாரசூன்யர். 2. லக்ஷ்மீ தேவியுடன் கூடியிருக்கிறவர்.

## अमोघः ॥ ११० ॥

(1) பிராணிகளால் பக்தியுடன் பூஜிக்கப் பட்டும், ஸ்துதி செய்யப்பட்டும் அவைகளுக்கு ஸகல பலனையும் வீணில்லாமல் கொடுக்கிறவர். (2) ஸத்ய ஸங்கல்பர். "सत्यकामः सत्यसंकल्पः" என்று சுருதி.

## पुण्डरीकाक्षः ॥ १११

1. இருதயகமலத்தை வியாபித்துக்கொண்டிருக்கிறவர். அதாவது இருதய கமலத்தில் காணப் பட்டவர். "यत्पुण्डरीकं पुरमध्यसंस्थम्" என்று சுருதி. (2) கமலத்தைப்போல் அழகான நேத்திரங்களை யுடையவர்.

## वृषकर्मा ॥ ११२

சிரேயஸ்கரமான தர்மலக்ஷணமான கர்மாவையுடையவர்.

## वृषाकृतिः ॥ ११३ ॥

"धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे" என்று கீதையில் சொல்லியபடி தர்மத்தை நிலை நிறுத்தும் பொருட்டு அவதரிக்கிறவர்.

रुद्रो बहुशिरा बभ्रुर्विश्वयोनिः शुचिश्रवाः ।
अमृतः शाश्वतस्थाणुर्वरारोहो महातपाः ॥ २६ ॥

## रुद्रः ॥ ११४ ॥

ஸம்ஹாரகாலத்தில் பிரஜைகளை ஸம்ஹாரம் செய்து கூக்குரலிடும்படி செய்கிறவர். 2. பக்தர்களுடைய துக்கங்களைப்போக்கி ஸந்தோஷம் செய்கிறவர். "रुदुःखं दुःखहेतुं वा विद्रावयति स प्रभुः । रुद्र इत्युच्यते तस्माच्छिवः परमकारणम् ॥" என்று லிங்கபுராணம்.

## बहुशिराः ॥ ११५ ॥

"सहस्रशीर्षा पुरुषः" என்று சுருதியில் சொல்லியபடி அநேக சிரஸ்ஸையுடையவர்.

## बभ्रुः ॥ ११६ ॥

லோகங்களைத் தரிக்கிறவர்.

## विश्वयोनिः ॥ ११७ ॥

ஜகத்திற்குக்காரணபூதர்.

## शुचिश्रवाः ॥ ११८ ॥

புண்ணியத்தைக் கொடுக்கக்கூடியதாயும் கேட்கத்தகுந்தவைகளாயுமுள்ள நாமாக்களை யுடையவர். அதாவது பாபங்களைப் போக்கும் பரிசுத்தமான திவ்ய நாமங்களை யுடையவர்.

## अमृतः ॥ ११९ ॥

மரணரஹிதர். "अजरोऽमरः" என்று சுருதி

## शाश्वतस्थाणुः ॥ १२० ॥

சாசுவதராயும் ஸ்தாணுவாயுமிருக்கிறவர்.

## वरारोहः ॥ १२१

1. சிரேஷ்டமான (अङ्क) அங்கத்தை அல்லது மடியை யுடையவர். (2) "न च पुनरावर्तते" என்று சுருதியில் சொல்லியபடி ஞானிகட்களுக்கு அதாவது பிரம்மஞானத்தைப் பெற்றவர்களுக்கு மறு ஜனனமில்லாத சிரேஷ்டமான ஆரோஹணத்தைக் கொடுக்கிறவர். (वरमारोहणं यस्मिन्निति) " यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम " என்று கீதை.

## महातपाः ॥ १२२ ॥

1. ஸ்ருஷ்டி விஷயமான அதிகமான ஞானத்தை யுடையவர். "यस्य ज्ञानमयं तपः" என்றும் சுருதி. (2) மஹத்தான ஐசுவரியம், பிரதாபம் இவைகளை யுடையவர்.

सर्वगः सर्वविद्भानुर्विष्वक्सेनो जनार्दनः ।
वेदो वेदविदव्यङ्गो वेदाङ्गो वेदवित्कविः ॥ २७ ॥

## सर्वगः ॥ १२३ ॥

ஜகத்திற்குக் காரணராயிருந்து எங்கும் வியாப்தரானபடியால் எங்கும் செல்லுகிறவர்.

## सर्वविद्भानुः ॥ १२४ ॥

ஸகலத்தையும் அறிகிறவராயும ஸ்வயம் பிரகாசராயு மிருக்கிறவர். "तमेव भान्तमनुभाति सर्वम्" என்று சுருதியும், "यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम्" என்று கீதையும்.

## विष्वक्सेनः ॥ १२५ ॥

யுத்த ஸம்ஹாரத்திற்கேற்பட்ட பல திக்குகளிலும் அஸுரர்களை ஓடி ஒளியும்படி செய்கிறவர்.

## जनार्दनः ॥ १२६ ॥

1. பக்தர்களின் துவேஷிகளைச் சீக்கிரத்தில் ஹிம்ஸிக்கிறவர். (2) பக்தர்களால் புரு

ஷார்த்த ஸித்தியின் பொருட்டுப் ப்ரார்த்திக்கப் படுகிறவர்.

## वेदः ॥ १२७ ॥

அக்ஞானத்தைப் போக்கி ஞானத்தைக் கொடுக்கிறவர். "तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः । नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥" என்று கீதை.

## वेदवित् ॥ १२८ ॥

"वेदान्तकृद्वेदविदेव चाहम्' என்று கீதையில் சொல்லியபடி வேத வேதாங்கங்களை யறிந்தவர். सर्वे वेदाः सर्वविद्याः सशास्त्राः सर्वे यज्ञाः सर्व इज्याश्च कृष्णः । विदुः कृष्णं ब्राह्मणास्तत्वतो ये तेषां राजन्सर्वयज्ञाः समाप्ताः ॥ ஸமஸ்த வேதங்கள், சாஸ்திர ஸஹிதமான ஸகல வித்தைகள், யாகங்கள் இவையாவும் கிருஷ்ணர் தான் என்று எந்த பிராம்மணர்கள் அறிகிறார்களோ அவர்களுக்கு ஸமஸ்த யக்ஞங் களும் முடிவுபெற்றவைகளே என்று மஹாபா ரதம்.

## ॥ अव्यङ्गः १२९ ॥

1. ஞானம் முதலானவைகளால் பரிபூர் ணர். வியக்தி இல்லாதவர். அதாவது புலப்ப டாதவர். 'अव्यक्तोऽयमचिन्त्योऽयम्' என்று கீதை.

## वेदाङ्गः ॥ १३० ॥

அனந்தமான கிளைகளையுடைய வேதங்களை அங்கங்களாயுடையவர்.

## वेदवित् ॥ १३१ ॥

வேதங்களை விசாரம் செய்கிறவர்.

## कविः ॥ १३२

ஸகலத்தையும் அறிகிறவர். "नान्योऽतोऽस्ति द्रष्टा" என்று சுருதி. "कविर्मनीषा" என்று மந்திர வர்ணம்.

लोकाध्यक्षः सुराध्यक्षो धर्माध्यक्षः कृताकृतः ।
चतुरात्मा चतुर्व्यूहश्चतुर्दंष्ट्रश्चतुर्भुजः ॥ २८ ॥

## लोकाध्यक्षः ॥ १३३ ॥

1. லோகங்களுக்கு அத்தியக்ஷர். (2) ஸமஸ்த லோகங்களையும் பிரதான்யமாய் ஸமீபத்திலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறவர்.

## सुराध्यक्षः ॥ १३४ ॥

லோகபாலர் முதலான தேவதைகளுக்கெல்லாம் அத்தியக்ஷர்.

## धर्माध्यक्षः ॥ १३५ ॥

பிராணிகளால் அநுஷ்டிக்கப்படும் தர்மம், அதர்மம் இவைகளுக்கு அநுரூபமான பலனைக் கொடுக்க அவைகளை ஸாக்ஷாத்தாய்ப் பார்த்துக் கொண்டிருக்கிறவர்.

## कृताकृतः ॥ १३६ ॥

கார்யரூபராயும் காரணரூபராயு மிருக்கிறவர்.

## चतुरात्मा ॥ १३७ ॥

ஸ்ருஷ்டி, ஸ்திதி, பிரளயம் இவை ஒவ்வொன்றிலும் நான்கு மூர்த்திகளை யுடையவர். அப்படியே விஷ்ணுபுராணத்தில்: ஸ்ருஷ்டி விபூதிகள்:—ब्रह्मा दक्षादयः कालस्तथैवाखिलजन्तवः । विभूतयो हरेरेता जगतः सृष्टिहेतवः ॥ ஸ்திதியின் விபூதிகள்:—विष्णुर्मन्वादयः कालः सर्वभूतानि च द्विज । स्थितेर्निमित्तभूतस्य विष्णोरेता विभूतयः ॥ பிரளய விபூதிகள்:— रुद्रः कालोऽन्तकाद्याश्च समस्ताश्चैव जन्तवः । चतुर्धा प्रलयायैता जनार्दनविभूतयः ॥

## चतुर्व्यूहः ॥ १३८ ॥

வாஸுதேவர், ஸங்கர்ஷணர், பிரத்யும்னர், அநிருத்தர் என்ற மூர்த்திகளால் தன்னை நான்கு விதமாய்ச் செய்து கொண்டு ஸ்ருஷ்டி முதலான

வைகளைச் செய்கிறவர். व्यूह्यात्मानं चतुर्धा वै वासुदेवादिमूर्तिभिः । । सृष्ट्यादीन्प्रकरोत्येष विश्रुतात्मा जनार्दनः ॥ என்று வியாஸ வசனம்.

## चतुर्दंष्ट्रः ॥ १३९ ॥

1. நான்கு கடைவாய்ப் பற்களை யுடைய நரஸிம்மரூபர். தம்ஷ்டிரங்கள் (दंष्ट्र:) கொம்புகளுக்கு (शृङ्ग) ஸமானமானபடியால் தம்ஷ்டிரங்கள் போலுள்ள நான்கு சிருங்கங்களையுடையவர். "चत्वारि शृङ्गा" என்று சுருதி.

## चतुर्भुजः ॥ १४० ॥

நான்கு புஜங்களை யுடையவர்.

भ्राजिष्णुर्भोजनं भोक्ता सहिष्णुर्जगदादिजः ।
अनघो विजयो जेता विश्वयोनिः पुनर्वसुः ॥ २९ ॥

## भ्राजिष्णुः ॥ १४१ ॥

பிரகாசஸ்வரூபமான தேஜோமயர்.

## भोजनम् ॥ १४२ ॥

போக்கியத்திற்கு யோக்கியமான மாயை போஜனம் என்று சொல்லப்பட்டது.

## भोक्ता ॥ १४३ ॥

ஜீவரூபியாயிருந்து பிரகிருதியை அநுபவிக்கிறவர்.

## महिष्णुः ॥ १४४ ॥

ஹிரண்யாக்ஷன் முதலிய கொடிய அஸுரர்களை அடக்கினவர்.

## जगदादिजः ॥ १४५ ॥

ஜகத்ஸ்ருஷ்டியின் ஆதியில் ஹிரண்யகர்ப ரூபியாக ஸ்வயமாக உண்டானவர்.

## अनघः ॥ १४६ ॥

“अपहतपाप्मा” என்று சுருதியில் சொல்லியபடி பாபரஹிதர்.

## विजयः ॥ १४७ ॥

ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் முதலான குணங்களால் விசுவத்தை ஜயித்தவர்.

## जेता ॥ १४८ ॥

ஸர்வ பூதங்களையும் தன் ஸ்வபாவத்தால் அதிசயமாய் அதிக்கிரமித்திருக்கிறவர்.

## विश्वयोनिः ॥ १४९ ॥

விசுவரூபமான பிரகிருதியை யோனியாயுடையவர்.

## पुनर्वसुः ॥ १५० ॥

பிரம்மா முதலான பிராணிகளின் சரீரத்தில் க்ஷேத்ரக்ஞரூபியாய் அடிக்கடி வாஸத்தை யுடையவர்.

उपेन्द्रो वामनः प्रांशुरमोघः शुचिरूर्जितः ।
अतीन्द्रः संग्रहः सर्गो धृतात्मा नियमो यमः ॥२०॥

## उपेन्द्रः ॥ १५१ ॥

1. தேவேந்திரனுக்கு அனுஜனாக அவதரித்தவர். 2. தேவேந்திரனுக்கும் மேலானவர். "ममोपरि यथेन्द्रस्त्वं स्थापितो गोभिरीश्वरः । उपेन्द्र इति कृष्ण त्वां गास्यन्ति भुवि देवताः ॥ என்று ஹரிவம்சம்.

## वामनः ॥ १५२ ॥

1. பலிச்சக்கிரவர்த்தியை வாமனரூபியாய் யாசித்தவர். 2. நன்கு பஜிக்கத்தகுந்தவர். "मध्ये वामनमासीनं विश्वे देवाः उपासते" என்று மந்திர வர்ணம்.

## प्रांशुः ॥ १५३ ॥

1. அந்த வாமனரூபியான பகவான் மூன்று லோகங்களையும் ஆக்கிரமிக்க உன்னதமான ரூபத்தை எடுத்தவர். तोये तु पतिते हस्ते वामनोऽभू-

दवामनः । सर्वदेवमयं रूपं दर्शयामास वै प्रभुः ॥ भूः पादौ द्यौः शिरश्चास्य चन्द्रादित्यौ च चक्षुषी । பலிச்சக்கிரவர்த்தியால் விடப்பட்ட ஜலமானது கையில் விழுந்தவுடன் வாமனர் உன்னதரூபத்தை யடைந்தார். அப்பொழுது பகவான் ஸமஸ்த தேவமயமான ரூபத்தைக் காண்பித்தார். அவருக்கு பூமி பாதங்கள், ஆகாசம் சிரஸ், சந்திரன், சூரியன் இவர்கள்தான் நேத்திரங்கள் என்று ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

## अमोघः ॥ १५४ ॥

வியர்த்தமாகாத செய்கையை யுடையவர்.

## शुचिः ॥ १५५ ॥

"अस्पर्शश्च महाञ्शुचिः" என்று மந்திரவர்ணத்தால் தன்னை நமஸ்கரிக்கின்றவர்களையும், ஸ்தோத்திரம் செய்கிறவர்களையும், பூஜிக்கிறவர்களையும் பரிசுத்தம் செய்கிறவர்.

## ऊर्जितः ॥ १५६ ॥

எப்பொழுதும் அதிசயமான பராக்கிரமத்தையுடையவர்.

## अतीन्द्रः ॥ १५७ ॥

ஸ்வபாவஸித்தமான ஞானம், ஐச்வரியம் முதலானவைகளால் தேவேந்திரனை அதிக்கிரமித்திருக்கிறவர்.

## संग्रहः ॥ १५८ ॥

பிரளய காலத்தில் ஸகலப் பிராணிகளையும் ஸம்ஹாரஞ் செய்து ஸங்கிரஹஞ் செய்கிறவர்.

## सर्गः ॥ १५९ ॥

1. ஸ்ருஷ்டிக்கப் படக்கூடியவைகளின் ஸ்வரூபராயிருக்கிறவர். 2. ஸ்ருஷ்டிக்குக்காரணர்.

## धृतात्मा ॥ १६० ॥

ஜனனம், மரணம் இவைகளன்னியில் ஒரே ரூபராயிருக்கிறவர்.

## नियमः ॥ १६१ ॥

பிரஜைகளை அவர்களுடைய அதிகாரத்தில் நிறுத்துகிறவர்.

## यमः ॥ १६२ ॥

ஸகலப் பிராணிகளின் ஹிருதயத்திலிருந்து கொண்டு அவைகளைத் தம்தம் காரியங்களில் பிரவர்த்திக்கும்படி செய்கிறவர்.

वेद्यो वैद्यः सदायोगी वीरहा माधवो मधुः ।
अतीन्द्रियो महामायो महोत्साहो महाबलः ॥ ३१ ॥

वेद्यः ॥ १६३ ॥

முமுக்ஷுக்களால் அறியத்தகுந்தவர்.

वैद्यः ॥ १६४ ॥

ஸகல வித்தைகளையுமறிந்தவர்.

सदायोगी ॥ १६५ ॥

எப்பொழுதும் ஆவிர்பூதமான ஸ்வரூபத்தையுடையவர்.

वीरहा ॥ १६६ ॥

தர்மத்தை நிலைநிறுத்தும்பொருட்டுத் தர்மவிரோதிகளான அஸுரர்களை வதம் செய்கிறவர்.

माधवः ॥ १६७ ॥

வித்தைக்குப்பதி. "मा विद्या च हरेः प्रोक्ता तस्या ईशो यतो भवान् । तस्मान्माधवनामासि धवः स्वामीति शब्दितः ॥" என்று ஹரிவம்சம்.

मधुः ॥ १६८ ॥

மதுவைப்போல் முமுக்ஷுக்களுக்கு ப்ரீதி

ருஷ்டமான பிரீதியைக் கொடுக்கிறவர்.

## अतीन्द्रियः ॥ १६९ ॥

"अशब्दमस्पर्शम्" என்று சுருதியில் சொல்லி யபடி இந்திரியாஹிதரானபடியால் இந்திரியங்க ளுக்கு அவிஷயர்.

## महामायः ॥ १७० ॥

"मम माया दुरत्यया" என்று கீதையில் சொல் லியபடி மாயாவிகளுக்கும் மாயாவியாயிருக்கிற வர்.

## महोत्साहः ॥ १७१ ॥

ஜகத்தின் உத்பத்தி, ஸ்திதி, லயம் இவைக ளில் அதிசயமான உத்ஸாஹத்தையுடையவர்.

## महाबलः ॥ १७२ ॥

பலிஷ்டர்களுக்கெல்லாம் பலசாலியானவர்

महाबुद्धिर्महावीर्यो महाशक्तिर्महाद्युतिः ।
अनिर्देश्यवपुः श्रीमानमेयात्मा महाद्रिधृक् ॥ ३२ ॥

## महाबुद्धिः ॥ १७३ ॥

புத்திமான்களுக்கெல்லாம் சிரேஷ்டர். மஹத்தான ஞானத்தையுடையவர்.

## महावीर्यः ॥ १७४ ॥

ஜகத்தின் உத்பத்திக்குக் காரணமான அசி்த்யாலக்ஷணமான மஹத்தான வீர்யத்தையுடையவர்.

## महाशक्तिः ॥ १७५ ॥

மஹத்தான ஸாமர்த்தியத்தை யுடையவர்.

## महाद्युतिः ॥ १७६ ॥

“ स्वयं ज्योतिः ” “ ज्योतिषां ज्योतिः ” என்ற முதலான சுருதிகளில் சொல்லியபடி பாஹியம் ஆப்பியந்தரமான தேஜஸ்ஸையுடையவர்.

## अनिर्देश्यवपुः ॥ १७७ ॥

ஸ்வாநுபவத்தால்மட்டும் அறியப் பட்டவராகையால் பிறருக்கு இதுதான் என்று குறிப்பிட்டுக்காண்பிக்க முடியாத சரீரத்தை யுடையவர்.

## श्रीमान् ॥ १७८ ॥

நிறம்பின ஐசுவரியமுள்ளவர்,

## अमेयात्मा ॥ १७९ ॥

ஸமஸ்தப்பிராணிகளாலும் அறியமுடியாத புத்தியையுடையவர்.

## महाद्रिधृक् ॥ १८० ॥

அம்ருத மந்தனகாலத்தில் மந்தரபர்வதத்தையும், கோரக்ஷணகாலத்தில் கோவர்த்தனபர்வதத்தையும் தரித்தவர்,

महेष्वासो महीभर्ता श्रीनिवासः सतां गतिः ।
अनिरुद्धः सुरानन्दो गोविन्दो गोविदां पतिः ॥३३॥

## महेष्वासः ॥ १८१ ॥

மஹத்தான பாணத்தின் க்ஷேபத்தையுடையவர்.

## महीभर्ता ॥ १८२ ॥

வராஹாவதாரம் எடுத்து ஸமுத்திரத்தில் முழுகின பூமியைத் தூக்கி எடுத்தவர்.

## श्रीनिवासः ॥ १८३ ॥

வக்ஷஸ்ஸில் வஸிக்கும் லக்ஷ்மியையுடையவர்.

## सतां गतिः ॥ १८४ ॥

வைதிகர்களான ஸாதுக்களுக்குப் புருஷார்த்த ஸாதனஹேதுவாயிருக்கிறவர்.

## अनिरुद्धः ॥ १८५ ॥

அவதாரங்களில் ஒருவராலும் நிரோதம்

செய்யப்படாதவர்.

## सुरानन्दः ॥ १८६ ॥

தேவர்களை எப்பொழுதும் திருப்தி செய்கிறவர்.

## गोविन्दः ॥ १८७ ॥

1. ஸமுத்திரத்தில் அமிழ்ந்து நஷ்டமாய்ப் போன பூமியை மறுபடி உத்தாரணம் செய்தவர். नष्टां वै धरणीं पूर्वमविन्दं वै गुहागताम् । गोविन्द इति तेनाहं देवैर्वाग्भिरभिष्टुतः ॥ என்று மோக்ஷதர்மம். 2. பசுக்களுக்கெல்லாம் இந்திரர். "अहं किलेन्द्रो देवानां त्वं गवामिन्द्रतां गतः । गोविन्द इति लोकास्त्वां स्तोष्यन्ति भुवि शाश्वतम् ॥"

## गोविदां पतिः ॥ १८८

வேதங்களை அறிந்தவர்களுக்குள் சிரேஷ்டர்.

मरीचिर्दमनो हंसः सुपर्णो भुजगोत्तमः ।
हिरण्यनाभः सुतपाः पद्मनाभः प्रजापतिः ॥ ३४ ॥

## मरीचिः ॥ १८९

தேஜஸ்விகளுக்கெல்லாம் தேஜஸ்வியாயிருக்கிறவர். "तेजस्तेजस्विनामहम्" என்று கீதை.

## दमनः ॥ १९० ॥

தம்தம் அதிகாரத்தில் அசிரத்தையாயிருக்கிற பிரஜைகளை யமரூபியாய் தண்டிக்கும் சீலத்தையுடையவர்.

## हंसः ॥ १९१ ॥

1. "நான் அவன்" (अहं सः) அதாவது நான் அந்தப்பரமாத்மாதான் என்று தியானம் செய்து ஆத்மஸ்வரூபத்தையடைந்தவனுடைய ஸம்ஸாரபயத்தைப் போக்குகிறவர். 2. ஸமஸ்த சரீரங்களிலும் செல்லுகிறவர். (हन्ति गच्छति सर्वशरीरेष्विति)

## सुपर्णः ॥ १९२ ॥

தர்மம், அதர்மம் இந்த ரூபமான அழகிய இரண்டு சிறகுகளையுடையவர்.

## भुजगोत्तमः ॥ १९३ ॥

புஜத்தால் செல்லும் பிராணிகளுக்குள் அதாவது ஸர்ப்பங்களுக்குள் சிரேஷ்டர்.

## हिरण्यनाभः ॥ १९४ ॥

1. பொன்னைப்போல் மங்களகரமான நாபியையுடையவர். 2. ஹிரண்மயமான நாபியை

யுடையவர்.

## सुतपाः ॥ १९५ ॥

பதரிகாசிரமத்தில் நரநாராயணரூபியாய்ச் சிறந்த தபஸ்ஸைச்செய்தவர். "मनसश्चेन्द्रियाणां च ह्यैकाग्र्यं परमं तपः।" என்று ஸ்மிருதி.

## पद्मनाभः ॥ १९६ ॥

1. பத்மம் போல் வர்த்துலமான நாபியையுடையவர். 2. ஹிருதயகமலத்தின் மத்தியில் பிரகாசிக்கிறவர்.

## प्रजापतिः ॥ १९७ ॥

பிரஜைகளுக்கெல்லாம் பிதா.

अमृत्युस्सर्वदृक्सिंहः संधाता संधिमान्स्थिरः ।
अजो दुर्मर्षणः शास्ता विश्रुतात्मा सुरारिहा ॥ ३५ ॥

## अमृत्युः ॥ १९८ ॥

விநாசமாவது அதற்குக்காரணமாவது இல்லாதவர்.

## सर्वदृक् ॥ १९९ ॥

தன்னுடைய ஸ்வாபாவிகமான ஞானத்தால் பிராணிகளின் புண்யபாபங்களை ஸாக்ஷாத்தாய் அறிகிறவர்.

सिंहः ॥ २०० ॥

தர்மத்வேஷிகளை ஹிம்ஸிக்கிறவர், அல்லது பாபங்களை நாசம் செய்கிறவர்.

सन्धाता ॥ २०१ ॥

புருஷர்களைக் கர்மபலன்களுடன் சேர்த்து வைக்கிறவர்.

सन्धिमान् ॥ २०२ ॥

ஜீவரூபியாய்ப் பலனை அனுபவிக்கிறவர்.

स्थिरः ॥ २०३ ॥

எப்பொழுதும் ஒரே ரூபியாயிருக்கிறவர்.

अजः ॥ २०४ ॥

எங்கும் செல்லுகிறவர்.

दुर्मर्षणः ॥ २०५ ॥

தானவர் முதலான கொடியர்களால் ஸஹிக்கமுடியாதவர்.

शास्ता ॥ २०६ ॥

சுருதி, ஸ்மிருதி முதலானவைகளால் ஸகலப் பிரஜைகளுக்கும் சாஸனத்தைச் செய்கிறவர்.

## विश्रुतात्मा ॥ २०७ ॥

"सत्यं ज्ञानमनन्तं ब्रह्म" என்று விசேஷமாய்க் கேட்கப்பட்ட பரமாத்மஸ்வரூபத்தை யுடையவர்.

## सुरारिहा ॥ २०८ ॥

தேவர்களின் துவேஷிகளை வதம் செய்தவர்.

गुरुर्गुरुतमो धाम सत्यः सत्यपराक्रमः ।
निमिषोऽनिमिषः स्रग्वी वाचस्पतिरुदारधीः ॥ २२ ॥

## गुरुः ॥ २०९ ॥

1. ஸர்வ வித்தைகளையுமுபதேசம் செய்கிறவர். 2. ஸகலப் பிராணிகளுக்கும் பிதா.

## गुरुतमः ॥ २१० ॥

பிரம்மா முதலானவர்களுக்கும் பிரம்மவித்தையை உபதேசம் செய்தவரானபடியால் ஆதிகுருவாயிருக்கிறவர். "यो ब्रह्माणं विदधाति पूर्वम्" என்று மந்திரவர்ணம்.

## धाम ॥ २११ ॥

1. பரஞ்ஜோதியாயிருக்கிறவர். "नारायण-परो ज्योतिः" என்று மந்திரவர்ணம். 2. ஸமஸ்

தகர்மங்களுக்கும் முக்கியமான ஆஸ்பதபூதர். "परं ब्रह्म परं धाम" என்று மந்திரவர்ணம்.

## सत्यः ॥ २१२ ॥

1. ஸத்தியலக்ஷணமான தர்மரூபியாயிருக்கிறவர். 'तस्मात्सत्यं परं वदन्ति' என்று சுருதி.
2. ஸத்தியத்திற்கு ஸத்தியமாயிருக்கிறவர். 'प्राणा वै सत्यं तेषामेव सत्यम्' என்று சுருதி.

## सत्यपराक्रमः ॥ २१३ ॥

வீணில்லாத பராக்கிரமத்தையுடையவர்.

## निमिषः ॥ २१४ ॥

யோகநித்திரையால் நிமீலிதமான (மூடின) நேத்திரங்களையுடையவர்.

## अनिमिषः ॥ २१५ ॥

நித்யப்ரபுத்தரானபடியாலும் ஆத்மரூபரானபடியாலும் எப்பொழுதும் பிராணிகளின் ஸகல காரியங்களையும் பார்த்துக்கொண்டிருக்கிறவர். மத்ஸ்யாவதாரஞ் செய்தவர்.

## स्रग्वी ॥ २१६ ॥

பஞ்சபூதங்களின் ஸ்வரூபமான வைஜயந்தி என்ற மாலையை உடையவர்.

## वाचस्पतिरुदारधीः ॥ २१७ ॥

வித்யாநிதியாயும், ஸமஸ்தவிஷயங்களிலும் ஞானத்தையுடையவராயுமிருக்கிறவர்.

अग्रणीर्ग्रामणीः श्रीमान्न्यायो नेता समीरणः ।
सहस्रमूर्धा विश्वात्मा सहस्राक्षस्सहस्रपात् ॥ २७ ॥

## अग्रणीः ॥ २१८ ॥

முமுக்ஷுக்களை சிரேஷ்டமான பதத்திற்கு அனுப்புகிறவர். அதாவது மோக்ஷத்தைத் தருகிறவர்.

## ग्रामणीः ॥ २१९ ॥

பூதஸமூஹங்களுக்கெல்லாம் நேதாவாக இருக்கிறவர்.

## श्रीमान् ॥ २२० ॥

ஸர்வோத்க்ருஷ்டமான காந்தியையுடையவர்.

## न्यायः ॥ २२१ ॥

பிரமாணங்களுக்கு உதவியாயும், பேதத்தை உண்டுபண்ணுமலுமிருக்கிற தர்க்கசாஸ்திரஸ்வரூபர்.

## नेता ॥ २२२ ॥

ஜகத்தான யந்திரத்தின் நிர்வாஹகர்.

## समीरणः ॥ २२३ ॥

வாயுரூபியாகப் பிராணிகளை ஸ்வகர்மாவில் ப்ரவிர்த்திக்கும்படி செய்கிறவர்.

## सहस्रमूर्धा ॥ २२४ ॥

அநேக சிரஸ்ஸுகளையுடையவர்.

## विश्वात्मा ॥ २२५ ॥

விசுவத்திற்கு ஆத்மாவாயிருக்கிறவர்.

## सहस्राक्षः ॥ २२६ ॥

அநேக நேத்திரங்களையுடையவர்.

## सहस्रपात् ॥ २२७ ॥

அநேக பாதங்களையுடையவர். "सहस्रशीर्षा पुरुषः सहस्राक्षः सहस्रपात्" என்று சுருதி.

आवर्तनो निवृत्तात्मा संवृतः संप्रमर्दनः ।
अहःसंवर्तको वह्निरनिलो धरणीधरः ॥ ३८ ॥

## आवर्तनः ॥ २२८ ॥

ஸம்ஸாரசக்கரத்தை எப்பொழுதும் சுழலும்படி செய்கிறவர்.

## निवृत्तात्मा ॥ २२९ ॥

ஸம்ஸாரபந்தத்திலிருந்து நிவிருத்தமான ஸ்வபாவத்தையுடையவர்.

## संवृतः ॥ २३० ॥

ஆச்சாதகமான அவித்தையால் மூடப்பட்டவர்.

## संप्रमर्दनः ॥ २३१ ॥

ருத்திரர், காலன் முதலான விபூதிகளால் பிராணிகளை மர்த்தனம் செய்கிறவர்.

## अहस्संवर्तकः ॥ २३२ ॥

ஸூர்யரூபியாயிருந்து தினங்களின் பிரவர்த்தகராயிருக்கிறவர்.

## वह्निः ॥ २३३ ॥

1. மஹா பிரளயரூபர். 2. ஹவிஸ்ஸை வஹிக்கிறவர்.

## अनिलः ॥ २३४ ॥

1. நிலயம் அல்லது இருப்பிடமில்லாதவர். 2. ஆதியில்லாதவர். அதாவது நித்யர். 3. ஒருவரிடத்திலும் பிரதி உபகாரத்தை உத்தேசித்துப் பிரதிகிரஹம் செய்யாதவர். 4. பிராணரூபி

## धरणीधरः ॥ २३५ ॥

ஆதிசேஷர், திக்கஜங்கள், வராஹர் இவை களின் ரூபராய் பூமியைத் தரிக்கிறவர்.

सुप्रसादः प्रसन्नात्मा विश्वधृग्विश्वभुग्विभुः ।
सत्कर्ता सत्कृतः साधुर्जह्नुर्नारायणो नरः ॥ ३९ ॥

## सुप्रसादः ॥ २३६ ॥

சிசுபாலனைப் போல் அபராதம் செய்தவர் களுக்கும் பூர்ணமாய் அனுக்கிரஹம் செய்கிற வர்.

## प्रसन्नात्मा ॥ २३७ ॥

1. ரஜஸ்தமோ குணங்களால் கலக்கப்ப படாத மனதையுடையவர். 2. பிரஸன்ன ஸ்வபாவர். கருணை பூர்ணமான இருதயத்தையு டையவர்.

## विश्वधृक् ॥ २३८ ॥

பரிபூர்ணமான காமங்களையுடையவரான படியால் விசுவத்தைத் தரிக்கிறவர்.

## विश्वभुक् ॥ २३९ ॥

விசுவத்தைக் காப்பாற்றுகிறவர். அனுப விக்கிறவர்.

## विभुः ॥ २४० ॥

ஹிரண்யகர்ப்பர் முதலான ரூபியாய் அநேகவிதமாய் உண்டாகிறவர். "नित्यं विभुम्" என்று மந்திரவர்ணம்.

## सत्कर्ता ॥ २४१ ॥

தன்னை ஆராதிக்கின்ற ஸாதுக்களைப் பூஜை செய்கிறவர்.

## सत्कृतः ॥ २४२ ॥

ஸகல ஜனங்களால் பூஜிக்கபபடும் ஸாதுக்களால் ஸத்காரம் செய்யப்பட்டவர்.

## साधुः ॥ २४३ ॥

1. நியாய மார்க்கத்தில் பிரவர்த்திக்கின்றவர். 2. ஸாத்திய பேதங்களன்னியில் ஸாத்தியத்தை மட்டும் ஸாதிக்கிறவர்.

## जह्नुः ॥ २४४ ॥

1. ஸம்ஹார காலத்தில் பிராணிகளைத் தன்னிடத்தில் அடக்கிக் கொள்ளுகிறவர். 2. தன்னுடைய மாஹாத்மியத்தால் பக்தர்களல்லாத மூடர்களுக்குத் தன் ஸ்வரூபத்தைக் காண்பிக்காமல் மறைக்கிறவர்.

## नारायणः ॥ २४५ ॥

ஆகாசம் முதலான காரியங்களைக் காரணாத்மகமாயிருந்து கொண்டு வியாபித்துக் கொண்டிருக்கிறவர். அவைகளை அயனமாயுடையவர். यच्च किंचित् जगत्सर्वं दृश्यते श्रूयतेऽपि वा । अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः ॥ என்று மந்திரவர்ணம். "नराज्जातानि तत्त्वानि नाराणीति ततो विदुः । तान्येव चायनं तस्य तेन नारायणः स्मृतः ॥" என்று மஹாபாரதம். 2. ஜீவன்களுக்குப் பிரளயகாலத்தில் அயனமாயிருக்கிறவர். "यत्प्रयन्त्यभिसंविशन्ति" என்று சுருதி. "नाराणामयनं यस्मात्तस्मान्नारायणः स्मृतः ॥" என்று பிரம்மவைவர்த்தம். 3. ஜலத்தை அயனமாயுடையவர். "आपो नारा इति प्रोक्ता आपो वै नरसूनवः । अयनं तस्य ताः पूर्वं तेन नारायणः स्मृतः ॥" என்று மனு வசனம். "नारायणाय नमः इत्ययमेव सत्यः संसारघोरविषसंहरणाय मन्त्रः । श्रृण्वन्तु भव्यमतयो यतयोऽस्तरागा उच्चैस्तरामुपदिशाम्यहमूर्ध्वबाहुः ॥" ஸம்ஸாரமாகிற கோரமான விஷத்தை எடுக்க "ओं नमो नारायणाय" என்ற மந்திரந்தான் தகுதியானது. நற்புத்தியுள்ளவர்களாயும், விஷயராகரஹிதர்களாயுமான யதிகளே, மேற்சொன்னதைக் கேளுங்கள். நான் கைதூக்கி உரத்து உபதேசம் செய்

கின்றேன். இது நாஸிம்ஹ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## नरः ॥ २४६ ॥

தன் பக்தர்களைத் தன் ஸ்தானத்திற்குக் கொண்டு போகிறவர். அல்லது எல்லாவற்றையும் நடத்துகிறவர். "नयतीति नरः प्रोक्तः परमात्मा सनातनः ।" என்று வியாஸ வசனம்.

असंख्येयोऽप्रमेयात्मा विशिष्टः शिष्टकृच्छुचिः ।
सिद्धार्थः सिद्धसंकल्पः सिद्धिदः सिद्धिसाधनः ॥

## असंख्येयः ॥ २४७ ॥

ஸங்கியை, நாமம், ரூபம் முதலியவை இல்லாதவர்.

## अप्रमेयात्मा ॥ २४८ ॥

அறிவிற்கெட்டாத ஸ்வரூபத்தையுடையவர்.

## विशिष्टः ॥ २४९ ॥

ஸகலத்தையும் அதிக்கிரமித்திருக்கிறவர்.

## शिष्टकृत् ॥ २५० ॥

விதிநிஷேத சாஸ்திரப் பிரவர்த்தகர். 2. சிஷ்டர்களைக் காப்பாற்றுகிறவர்.

## शुचिः ॥ २५१ ॥

எப்பொழுதும் பரிசுத்த ஸ்வபாவர்.

## सिद्धार्थः ॥ २५२ ॥

பரிபூர்ணமான காமங்களையுடையவர் "सत्यकामः" என்று சுருதி.

## सिद्धसंकल्पः ॥ २५३ ॥

நிஷ்பன்னஸங்கல்பர். "सत्यसंकल्पः" என்று சுருதி.

## सिद्धिदः ॥ २५४ ॥

கர்மாவை அனுஷ்டிக்கிறவர்களுக்குத் தம் தம் அதிகாரத்திற்குத் தக்கபடிப் பலனைக் கொடுக்கிறவர்.

## सिद्धिसाधनः ॥ २५५ ॥

கிரியைகளை ஸாதிக்கிறவர்.

वृषाही वृषभो विष्णुर्वृषपर्वा वृषोदरः ।
वर्धनो वर्धमानश्च विविक्तः श्रुतिसागरः ॥ ४१ ॥

## वृषाही ॥ २५६ ॥

தர்மத்தையே த்வாதசாஹத்தியர்களாயுடையவர். वृषः என்றால் தர்மம் அதாவது புண்

யம். அது ஸூர்யப்பிரகாசம் போல் பிரகாச முள்ளதாகையால் அதை अहः (தினம்) என்று சொல்லப்பட்டது.

## वृषभः ॥ २५७ ॥

பக்தர்களுக்குக் காமங்களை மழை வர்ஷிப்பது போல் கொடுக்கிறவர்.

## विष्णुः ॥ २५८ ॥

திருவிக்கிரமாவதாரத்தில் அடிகளால் உலகங்களை வியாபித்தவர். "विष्णुर्विक्रमणात्" என்று வியாஸவசனம்.

## वृषपर्वा ॥ २५९ ॥

பக்தர்கள் தன்னுடைய சிரேஷ்டமான ஸ்தானத்திற்கு ஸுலபமாய்ப் போகத் தர்மங்களைப் படியாயுடையவர்.

## वृषोदरः ॥ २६० ॥

பிரஜைகளை வர்ஷிப்பது போலிருக்கிற உதரத்தையுடையவர்.

## वर्धनः ॥ २६१ ॥

பிரஜைகளை விருத்தி செய்கிறவர்.

## वर्धमानः ॥ २६२ ॥

பிரபஞ்ச ரூபியாய் விருத்தியடைகிறவர்

## विविक्तः ॥ २६६ ॥

பிரஜைகளை விருத்தி செய்து கொண்டும், தானும் பிரபஞ்சரூபியாய் விருத்தியடைந்தும் தான் ஒன்றிலும் ஸம்பந்தமில்லாமலிருக்கிறவர்.

## श्रुतिसागरः ॥ १६४ ॥

நதிகளுக்கு ஸமுத்திரம் எப்படி முக்கிய ஸ்தானமோ அப்படியே வேதங்களுக்கு முக்கியமான நிதியாயிருக்கிறவர்.

सुभुजो दुर्धरो वाग्मी महेन्द्रो वसुदो वसुः ।
नैकरूपो बृहद्रूपः शिपिविष्टः प्रकाशनः ॥ ४२ ॥

## सुभुजः ॥ २६५ ॥

ஜகத்தை ரக்ஷிக்கக்கூடிய அழகான புஜங்களையுடையவர்.

## दुर्धरः ॥ २६६ ॥

1. பிறரால் தரிக்க முடியாத பூமி முதலானவைகளைத் தரித்துக் கொண்டு ஸ்வயம் பிறரால் தரிக்கமுடியாமலிருக்கிறவர். (2) இபாண

காலத்தில் முமுக்ஷுக்களால் சிரமத்துடன் இருதயத்தில் தரிக்கப்படுகிறவர்.

## वाग्मी ॥ २६७ ॥

வேதமயமான சிரேஷ்டமான வாக்கையுடையவர்.

## महेन्द्रो ॥ २६८ ॥

ஈசுவரர்களுக் கெல்லாம் ஈசுவரர்.

## वसुदः ॥ २६९ ॥

தானம் செய்கிறவர்களுக்கு விசேஷமாய்த் தனத்தைக் கொடுக்கிறவர். "अन्नादो वसुदानः" என்று சுருதி.

## वसुः ॥ २७० ॥

1. தன்னால் கொடுக்கப்பட்ட தன ரூபமாயிருக்கிறவர். 2. தன் மாயையால் தன்னை மறைத்துக் கொள்ளுகிறவர். 3. ஆகாசத்தையே முக்கியமான வஸதியாயுடையவர். "वसु-रन्तरिक्षसत्" என்று சுருதி.

## नैकरूपः ॥ २७१ ॥

ஒரு ரூபமில்லாமல் அனேக ரூபத்தையு

டையவர். 'इन्द्रो मायाभिः पुरुरूप ईयते" என்று சுருதி.

## बृहद्रूपः ॥ २७२ ॥

வராஹம் முதலான பிருஹத்தான ரூபங்களையுடையவர்.

## शिपिविष्टः ॥ २७३ ॥

1. பசுக்களில் யக்ஞரூபியாய் பிரவேசிக்கிறவர் 'यज्ञो वै विष्णुः पशवः शिपिर्यज्ञ एव पशुषु प्रतितिष्ठति' என்று சுருதி. (2) ஸூர்யரச்மிகளில் பிரவேசித்திருக்கிறவர். "शैत्याच्छयनयोगाच्च शीति वारि प्रचक्षते । तत्पानाद्रक्षणाच्चैव शिपयो रश्मयो मताः ॥ तेषु प्रवेशाद्विश्वेशः शिपिविष्ट इहोच्यते ॥

## प्रकाशनः ॥ २७४ ॥

எல்லாவற்றிற்கும் தன்னுடைய ஸத்தால் பிரகாசத்தைக் கொடுக்கும் ஸ்வபாவத்தையுடையவர்.

ओजस्तेजोद्युतिधरः प्रकाशात्मा प्रतापनः ।
ऋद्धः स्पष्टाक्षरो मन्त्रश्चन्द्रांशुर्भास्करद्युतिः ॥

## ओजस्तेजोद्युतिधरः ॥ २७५ ॥

பிராணபலம், சௌர்யம், முதலான குணங்

கள், தீப்தி இவைகளைத் தரித்துக் கொண்டிருக்கிறவர். அல்லது “ओजः, तेजः, द्युतिधरः என்று மூன்று நாமாக்கள். ओजः பலம் அதாவது பலத்தையுடையவர்களுக்குக் காணப்படும் பலமென்பது பரமாத்மா தான். तेजः தேஜஸ்-தேஜஸ்விகளிடத்தில் காணப்படும் தேஜஸ் பரமாத்மா தான். ‘बलं बलवतामस्मि तेजस्तेजस्विनामहम्’ என்று கீதை. द्युतिधरः க்ஞான லக்ஷணமான த்யுதியை தரித்துக் கொண்டிருக்கிறவர்.

## प्रकाशात्मा ॥ २७६ ॥

பிரகாசஸ்வரூபமான ஆத்மாவையுடையவர்.

## प्रतापनः ॥ २७७ ॥

ஸூர்யன் முதலான மூர்த்தியாயிருந்து கொண்டு விச்வத்தைப் பிரதாபம் செய்கிறவர்.

## ऋद्धः ॥ २७८ ॥

தர்மம், ஞானம், வைராக்கியம் முதலானவைகளுடன் கூடியவர்.

## स्पष्टाक्षरः ॥ २७९ ॥

உதாத்தமாயிருக்கிற ‘ओं’ (ஓங்கார) லக்ஷணமான அக்ஷரத்தையுடையவர்.

## मन्त्रः ॥ २८० ॥

ருக்யஜுஸ், ஸாமலக்ஷணமான மந்திர ரூபியாயிருக்கிறவர்

## चन्द्रांशुः ॥ २८१ ॥

தீக்ஷ்ணமான ஸூர்ய தாபம் போலுள்ள ஸம்ஸார தாபத்தால் தபிக்கப்பட்ட மனதையுடைய முமுக்ஷுக்களுக்கு சந்திர கிரணம் போல் ஸந்தோஷத்தைக் கொடுக்கிறவர்.

## भास्करद्युतिः ॥ २८२ ॥

ஸூர்யனுடைய ஒளியைப் போல் ஒளியையுடையவர்.

अमृतांशूद्भवो भानुः शशबिन्दुः सुरेश्वरः ।
औषधं जगतः सेतुः सत्यधर्मपराक्रमः ॥ ४४ ॥

## अमृतांशूद्भवः ॥ २८३ ॥

அமிர்தத்திற்காகப் பாற்கடலை மதனம் செய்த காலத்தில் சந்திரனுடைய உத்பத்திக்குக் காரணமாயிருந்தவர்.

## भानुः ॥ २८४ ॥

பிறருடைய ஒளியை அபேக்ஷியாமல் ஸ்வயம் பிரகாசராயிருக்கிறவர். 'तमेव भान्तमनुभाति सर्वम्' என்று சுருதி.

## शशबिन्दुः ॥ २८५ ॥

முயல் அடையாளமுடைய சந்திரனைப் போல் பிரஜைகளைப் போஷிக்கிறவர். "पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ।" என்று கீதை.

## सुरेश्वरः ॥ २८६ ॥

பலங்களத்தைக் கொடுக்கிற தேவர்களுக் கெல்லாம் ஈசுவரர்.

## औषधम् ॥ २८७ ॥

ஸம்ஸாரமாகிற வியாதிக்கு மருந்தாயிருக் கிறவர்.

## जगतस्सेतुः ॥ २८८ ॥

லோகங்களை ஸம்ஸாரமாகிற ஸாகரத்திலி ருந்து கரையேற்றுவதில் காரணபூதரானபடியா லும், வர்ணாசிரமம் முதலானவைகளுக்குப் பங் கம்வராமல் அணைபோல் அவைகளைக் காப் பாற்றுவதற்குக் காரணரானபடியாலும் ஜகத் திற்கு அணையாயிருக்கிறவர். 'एष सेतुर्विधारण एषां लोकानामसंभेदाय' என்று சுருதி.

## सत्यधर्मपराक्रमः ॥ २८९ ॥

ஸத்தியமான தர்மம், ஞானம் முதலான

குணங்கள், பராக்கிரமம், இவைகளையுடையவர்.

भूतभव्यभवन्नाथः पवनः पावनोऽनलः ।
कामहा कामकृत्कान्तः कामः कामप्रदः प्रभुः ॥

## भूतभव्यभवन्नाथः ॥ २९० ॥

ஜனித்தவும், ஜனிக்கின்றவும், ஜனிக்கப் போகிறவுமான பிராணி ஸமூஹங்களுக்கெல்லாம் நாதர். 2. அநந்தப் பிராணி ஸமூஹங்களால் யாசிக்கப்படுகிறவர். 3. அவைகளுக்கு ஈசர்.

## पवनः ॥ २९१ ॥

வாயு ரூபியாயிருக்கிறவர். 'पवनः पवतामस्मि' என்று கீதை. அல்லது பரிசுத்தமாயிருக்கிறவர்களுக்குள் வாயு.

## पावनः ॥ २९२ ॥

காற்று வீசும்படி செய்கிறவர். 'भीषास्मात् वातः पवते' என்று சுருதி.

## अनलः ॥ २९३ ॥

1. அக்ஞானதசையில் பிராணன்களைத் தான் என்று கிரஹிக்கும் ஜீவனாயிருக்கிறவர். 2. கந்தமில்லாதவர். 'अगन्धमस्पर्शम्' என்று சுருதி 3. பர்யாப்தமில்லாதவர்.

## कामहा ॥ २९४ ॥

1. முமுக்ஷுக்களிடமிருக்கும் கிருபையால் அவர்களுடைய காமங்களை நாசம் செய்கிறவர். 2. ஹிம்ஸகர்களுடைய அபீஷ்டங்களை நாசம் செய்கிறவர்.

## कामकृत् ॥ २९५ ॥

1. ஸத்துவ குணத்தையுடைய காமிகளுக்குக் காமங்களைக் கொடுக்கிறவர். 2. மன்மதனுக்கு ஜனகராயிருக்கிறவர்.

## कान्तः ॥ २९६ ॥

மனோக்ஞமான ரூபத்தையுடையவர்.

## कामः ॥ २९७ ॥

புருஷார்த்தங்களை யபேக்ஷிக்கிறவர்களால் விரும்பப்படுகிறவர்.

## कामप्रदः ॥ २९८ ॥

பக்தர்களுக்கு விசேஷமாய்க் காமங்களைக் கொடுக்கிறவர்.

## प्रभुः ॥ २९९ ॥

எல்லாவற்றிற்கும் பிரபுவாயிருக்கிறவர்.

युगादिकृद्युगावर्तो नैकमायो महाशनः ।
अदृश्यो व्यक्तरूपश्च सहस्रजिदनन्तजित् ॥ ९६ ॥

## युगादिकृत् ॥ ३०० ॥

யுகம் முதலான கால பேதத்திற்குக் கர்த்தாவாயிருக்கிறவர். (2) யுகங்களின் ஆரம்பத்தைச் செய்கிறவர்.

## युगावर्तः ॥ ३०१ ॥

காலாத்மகராயிருந்து கிருத (कृत) முதலான யுகங்களை ஆவர்த்தனம் செய்கிறவர்.

## नैकमायः ॥ ३०२ ॥

அநேக மாயைகளையுடையவர்.

## महाशनः ॥ ३०३ ॥

கல்பத்தின் முடிவில் ஸகலத்தையும் விழுங்குகிறவர்.

## अदृश्यः ॥ ३०४ ॥

ஸமஸ்த புத்தீந்திரியங்களாலும் அறிய முடியாதவர்.

## व्यक्तरूपः ॥ ३०५ ॥

1. ஸ்தூல ரூபத்தால் வியக்தமான ஸ்வரூபத்தையுடையவர். 2. யோகிகளிடம் ஸ்வ

யம்பிரகாசராய் விபக்தமான ரூபத்தையுடைய வர்.

## सहस्रजित ॥ ३०६ ॥

யுத்தங்களில் அநேக அஸுரர்களை ஜயித் தவர்.

## अनन्ताजित् ॥ २०७ ॥

யுத்தக்கிரீடை முதலானவைகளில் ஸமஸ் தமான பிராணிகளையும் தன்னுடைய ஸ்வபாவ மான அபரிமித சக்தியால் ஜயிக்கிறவர்.

इष्टोऽविशिष्टः शिष्टेष्टः शिखण्डी नहुषो वृषः ।
क्रोधहा क्रोधकृत्कर्ता विश्वबाहुर्महीधरः ॥ ४७ ॥

## इष्टः ॥ ३०८ ॥

1. பரமானந்த ஸ்வரூபரானபடியால் ஸகலருக்கும் பிரியர் 2. யாகங்களில் பூஜிக்கப் படுகிறவர்.

## अविशिष्टः ॥ ३०९ ॥

ஸமஸ்தப் பிராணிகளிடத்திலும் அந்தர் யாமியாயிருக்கிறவர்.

## शिष्टेष्टः ॥ ३१० ॥

1. ஞானிகளுக்கு இஷ்டர் (2) ஸாதுக் களை இஷ்டர்களாயுடையவர். ‘प्रियो हि ज्ञानिनो

ऽप्यर्थमहं स च मम प्रियः ।' என்று கீதை. (3) சிஷ்டர்களால் பூஜிக்கப்படுகிறவர்.

## शिखण्डी ॥ ३११ ॥

கோப (गोप) வேஷதாரியாய் மயில் தோகையை அலங்காரமாயுடையவர்.

## नहुषः ॥ ३१२ ॥

மாயையால் பிராணிகளை ஸம்ஸாரத்தில் கட்டுகிறவர்.

## वृषः ॥ ३१३ ॥

காமங்களை வர்ஷிக்கிற தர்ம ஸ்வரூபர். 'वृषो हि भगवान्धर्मः स्मृतो लोकेषु भारत । नैघण्टुकपदाख्यैर्विद्धि मां वृष इत्युत ॥'' என்று மஹாபாரதம்.

## क्रोधहा ॥ ३१४ ॥

ஸாதுக்களுடைய கோபத்தை நாசம் செய்கிறவர்.

## क्रोधकृत्कर्ता ॥ ३१५ ॥

கோபங்கொண்ட தைத்யர்களை வதம் செய்கிறவர். அல்லது, क्रोधकृत् कर्ता என்று இரண்டு நாமாக்கள். क्रोधकृत् துஷ்டர்களிடத்தில் கோபங் கொள்ளுகிறவர். कर्ता ஜகத்திற்குக் கர்த்தா.

‘एषां पुरुषाणां यः कर्ता यस्य वै तत्कर्म स वै वेदितव्यः’ என்று சுருதி.

## विश्वबाहुः ॥ ३१६ ॥

1. விசுவத்திற்கு ஆலம்பன பூதராயிருக்கிறவர். 2. விசுவத்தை பாஹுக்களாயுடையவர். ‘विश्वतो बाहुः’ என்று சுருதி.

## महीधरः ॥ ३१७ ॥

1. பக்தர்களால் ஸமர்ப்பிக்கப்படும் பூஜையை அங்கிகரிக்கிறவர். (2) பூமியைத் தரிக்கிறவர்.

अच्युतः प्रथितः प्राणः प्राणदो वासवानुजः ।
अपां निधिरधिष्ठानमप्रमत्तः प्रतिष्ठितः ॥ ४८ ॥

## अच्युतः ॥ ३१८ ॥

ஆறுவித (भावविकार) பாவவிகாரரஹிதர் ‘शाश्वतं शिवमच्युतम्’ என்று சுருதி.

## प्रथितः ॥ ३१९ ॥

காலத்தின் உத்பத்தி முதலான கர்மாக்களால் பிரக்கியாதியையடைந்தவர்.

## प्राणः ॥ ३२० ॥

ஸூத்திராத்மகராய் பிரஜைகளை ஜீவிக்கும்

படி செய்கிறவர். 'प्राणो वाऽहमस्मि वायुर्वै गौतम तत्सूत्रम्" என்று சுருதி.

## प्राणदः ॥ ३२१ ॥

ஸுரர்களுக்குப் பிராணனையும் பலனையும் கொடுக்கிறவர். அஸுரர்களுக்குப் பிராணனையும் பலனையும் கண்டிக்கிறவர்.

## वासवानुजः ॥ ३२२ ॥

காசியபரிடத்திலிருந்து அதிதியிடத்தில் தேவேந்திரனுக்கு அனுஜராக ஜனித்தவர்.

## अपांनिधिः ॥ ३२३ ॥

ஜலத்திற்கு நிதியாயிருக்கிறவர். "सरसामस्मि सागरः" என்று கீதை.

## अधिष्ठानम् ॥ ३२४ ॥

ஸமஸ்த பூதங்களுக்கும் உபாதானகாரணமாயும், அதிஷ்டானமாயுமிருக்கிற பிரம்மம். 'मत्स्थानि सर्वभूतानि' என்று கீதை.

## अप्रमत्तः ॥ ३२५ ॥

கர்மாதிகாரிகளுக்குத் தம்தம் கர்மாவிற்கு அனுரூபமான பலனைக் கொடுத்துக்கொண்டு பிரமாதமில்லாமலிருக்கிறவர்.

## प्रतिष्ठितः ॥ ३२६ ॥

தமக்கு வேறு ஆதாரமில்லாமல் தன்னுடைய மஹிமையிலிருக்கிறவர். 'स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वे महिम्नि' என்று சுருதி.

स्कन्दः स्कन्दधरो धुर्यो वरदो वायुवाहनः ।
वासुदेवो बृहद्भानुरादिदेवः पुरन्दरः ॥ ४९ ॥

## स्कन्दः ॥ ३२७ ॥

1. அமிருதரூபமாய்ப் பெருகுகிறவர். 2. வாயுரூபியாய் ஸகலத்தையும் சோஷணஞ் செய்கிறவர்.

## स्कन्दधरः ॥ ३२८ ॥

தர்மமார்க்கத்தைத் தரிக்கிறவர்,

## धुर्यः ॥ ३२९ ॥

ஸமஸ்த பூதங்களின் ஜன்மாதி லக்ஷணமான பாரத்தை வஹிக்கிறவர்.

## वरदः ॥ ३३० ॥

1. அபீஷ்டமான வரங்களைக் கொடுக்கிறவர். 2. யஜமானரூபியாயிருந்து பசுவைக்கொடுக்கிறவர். 'गौर्वै वरः' என்று சுருதி.

## वायुवाहनः ॥ ३३१ ॥

ஸப்தாவஹங்களான மருத்துக்களை வீசும்படி செய்கிறவர். आवहः, प्रवहः, संवहः, उद्वहः, विवहः, परिवहः, परावहः என்று ஏழுமருத்துக்கள்.

## वासुदेवः ॥ ३३२ ॥

1. ஸூர்யன் தன்னுடைய கிரணங்களால் ஜகத்தை எப்படி வியாபித்துக்கொள்ளுகிறானே அப்படியே ஸமஸ்த பூதங்களையும் தன்னுடைய ஸத்தால் வியாபித்துக் கொள்ளுகிறவர். 2. ஸமஸ்த பூதங்களிலும் வஸிக்கிறவர். 3 ஸமஸ்த பூதங்களுக்கும் வாஸஸ்தானமாயிருக்கிறவர்.

'छादयामि जगत्सर्वं भूत्वा सूर्य इवांशुभिः ।
सर्वभूताधिवासश्च वासुदेवस्ततः स्मृतः ॥
वसनात्सर्वभूतानां वसुत्वाद्देवयोनितः ।
वासुदेवस्ततो ज्ञेयो योगिभिस्तत्त्वदर्शिभिः ॥'

என்று மஹாபாரதம்.

'सर्वत्रासौ समस्तं च वसत्यत्रेति वै यतः ।
ततः स वासुदेवेति विद्वद्भिः परिपठ्यते ॥'

என்று விஷ்ணுபுராணம்.

## बृहद्भानुः ॥ ३३३ ॥

சந்திர ஸூர்யர்களை அதிக்கிரமித்திருக்கிறதாயும், ஸகல ஜகத்தையும் பிரகாசிக்க வைக்கும் படியான பிருஹத்தான கிரணங்களையுடையவர்.

## आदिदेवः ॥ ३३४ ॥

ஸகலத்திற்கும் காரணபூதராயும், பிரகாசகராயுமிருக்கிறவர்.

## पुरंदरः ॥ ३३५ ॥

அஸுரர்களுடைய நகரங்களை நாசம் செய்தவர்.

अशोकस्तारणस्तारः शूरः शौरिर्जनेश्वरः ।
अनुकूलः शतावर्तः पद्मी पद्मनिभेक्षणः ॥ ५० ॥

## अशोकः ॥ ३३६ ॥

பசி, தாஹம், விஸனம், மயக்கம், மூப்பு, மரணம் என்ற ஆறு ஊர்மிகளால் விடுபட்டவர்.

## तारणः ॥ ३३७ ॥

ஸாதுக்களை ஸம்ஸாரஸாகரத்திலிருந்து தாண்டி வைக்கிறவர்.

## तारः ॥ ३३८ ॥

கர்ப்பவாஸம், ஜனனம், ஜரா, மரணம் முதலான பயங்களிலிருந்து முமுக்ஷுக்களை தாண்டும்படி செய்கிறவர்.

## शूरः ॥ ३३९ ॥

அதிசயமான விக்கிரமத்தையுடையவர்.

## शौरिः ॥ ३४० ॥

சூரருடைய குமாரரான வசுதேவரூபியாயிருக்கிறவர். 2. சூரகுலத்திலுண்டானவர்.

## जनेश्वरः ॥ ३४१ ॥

ஸகலப் பிராணிகளுக்கும் ஈசர்.

## अनुकूलः ॥ ३४२ ॥

ஆத்மா ஸர்வ வியாபகரானபடியால் தனக்குத்தானே பிரதிகூலம் செய்யாமல் அனுகூலராயிருக்கிறவர்.

## शतावर्तः ॥ ३४३ ॥

1. தர்மத்தை ரக்ஷிக்கும்பொருட்டு அநேக தடவை பூமியில் அவதரித்தவர். 2. நாடிகளில் பிராணரூபியாயிருக்கிறவர்.

## पद्मी ॥ ३४४ ॥

பத்மத்தைக் கையிலுடையவர்.

## पद्मनिभेक्षणः ॥ ३४५ ॥

தாமரைப் பூபோலுள்ள நேத்திரங்களை யுடையவர்.

पद्मनाभोऽरविन्दाक्षः पद्मगर्भः शरीरभृत् ।
महर्द्धिरृद्धो वृद्धात्मा महाक्षो गरुडध्वजः ॥ ५१ ॥

## पद्मनाभः ॥ ३४६ ॥

இருதயபத்மத்தின் மத்தியில் இருக்கிறவர்

## अरविन्दाक्षः ॥ ३४७ ॥

தாமரைக்கண்ணர்.

## पद्मगर्भः ॥ ३४८ ॥

இருதயகமலத்தின் மத்தியில் உபாஸிக்கத் தகுந்தவர்.

## शरीरभृत् ॥ ३४९ ॥

1. அன்னரூபமாயும் பிராணரூபமாயும் பிராணிகளுடைய சரீரங்களைத் தாரணம் செய்கிறவர். 2. தன் மாயையால் அநேக சரீரங்களை எடுக்கிறவர்.

## महर्द्धिः ॥ ३५० ॥

மஹத்தான விபூதியையுடையவர்.

## ऋद्धः ॥ ३५१ ॥

பிரபஞ்சரூபமாய் விருத்தியையடைகிறவர்.

## वृद्धात्मा ॥ ३५२ ॥

புராதனமான ஆத்மாவை யுடையவர்.

## महाक्षः ॥ ३५३ ॥

மஹத்தான நேத்திரங்களையுடையவர்.

## गरुडध्वजः ॥ ३५४ ॥

கருடனைத் த்வஜமாயுடையவர்.

अतुलः शरभो भीमः समयज्ञो हविर्हरिः ।
सर्वलक्षणलक्षण्यो लक्ष्मीवान्समितिंजयः ॥ ५२ ॥

## अतुलः ॥ ३५५ ॥

தனக்கு உபமானமே இல்லாதவர். 'नैतस्य प्रतिमास्ति यस्य नाम महद्यशः' என்று ச்ருதி. 'नत्व-त्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यः' என்று கீதை.

## शरभः ॥ ३५६ ॥

சரீரங்களில் பிரத்யகாத்மாவாக பிரகா

சிக்கிறவர்.

## भीमः ॥ ३५७ ॥

ஸகலத்திற்கும் பயங்கரரா யிருக்கிறவர். அல்லது 'अभीमः' என்று பதம். ஸன்மார்க்கத்திலிருந்து நழுவாத ஸாதுக்களுக்கு பயங்கரரில்லாமலிருக்கிறவர்.

## समयज्ञः ॥ ३५८ ॥

1. ஸ்ருஷ்டி, ஸ்திதி, விநாசம் இவைகளை யறிந்தவர். 2. ஆறுவிதஸமயங்களை யறிந்தவர். 3. ஸர்வபூதங்களையும் ஸமமாகப் பார்ப்பதையே யக்ஞமாயுடையவர். 'समत्वमाराधनमच्युतस्य' என்று பிரஹ்லாதவசனம்.

## हविर्हरिः ॥ ३५९ ॥

1. யக்ஞங்களில் ஹவிர்ப்பாகத்தை கிரஹித்துக் கொள்ளுகிறவர். 'अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।' என்று கீதை. 2. ஸ்மரணம் செய்தமாத்திரத்திலேயே பிராணிகளின் பாபங்களை நாசம் செய்கிறவர். ஹரித்வர்ணத்தையுடையவர். 'हराम्यहं हि स्मर्तॄणां हविर्भागं क्रतुष्वहम् । वर्णश्च मे हरिच्छ्रेष्ठस्तस्माद्धरिरहं स्मृतः ॥ என்று வியாசவசனம்.

## सर्वलक्षणलक्षण्यः ॥ ३६० ॥

ஸகலப் பிரமாணங்களாலும் யுக்திகளால் அறியத்தகுந்த உண்மையான ஒரே பொருள்.

## लक्ष्मीवान् ॥ ३६१ ॥

எப்பொழுதும் வக்ஷஸ்ஸ்லில் வஸிக்கும் லக்ஷ்மியையுடையவர்.

## समितिंजयः ॥ ३६२ ॥

யுத்தங்களில் ஜயிக்கிறவர்.

विक्षरो रोहितो मार्गो हेतुर्दामोदरः सहः ।
महीधरो महाभागो वेगवानमिताशनः ॥ ९३ ॥

## विक्षरः ॥ ३६३ ॥

நாசரஹிதர்.

## रोहितः ॥ ३६४ ॥

ஸ்வேச்சையாய் மூர்த்தியை யுடையவர். (மத்ஸ்ய மூர்த்தி).

## मार्गः ॥ ३६५ ॥

முமுக்ஷுக்களால் தேடப்படுகிறவர். (2) பிரம்மானந்தத்தை யடைவதற்கு உபாயமாயிருக்கிறவர்.

## हेतुः ॥ ३६६ ॥

உபாதான காரணராயும் நிமித்த காரணராயு மிருக்கிறவர்.

## दामोदरः ॥ ३६७ ॥

1. தமம் முதாலன ஸாதனங்களாலுண்டான சிரேஷ்டமான ஞானத்தால் அறியப்படுகிறவர். 2. யசோதையால கயிரால் உதரத்தில் கட்டப்பட்டவர். 'तयोर्मध्यगतं बद्धं दाम्ना गाढं तयोदरे । ततश्च दामोदरतां स ययौ दामबन्धनात् ॥' என்று பிரம்ம புராணம். 3. ஸகல லோகங்களையும் உதரத்திலுடையவர். 'दामानि लोकनामानि तानि यस्योदरान्तरे । तेन दामोदरो देवः श्रीधरस्तु समाश्रितः ॥' என்று வியாஸ வசனம்.

## सहः ॥ ३६८ ॥

1. ஸகலத்தையும் வெல்லுகிறவர். 2. எல்லாவற்றையும் பொறுக்கிறவர்.

## महीधरः ॥ ३६९ ॥

பர்வத ரூபியாய் பூமியைத்தரிக்கிறவர்.

## महाभागः ॥ ३७० ॥

1. பிரகிருஷ்டமான போஜனங்களையுடைய

வர் 2. அவதாரங்களில் மஹத்தான பாக்கியத்தையுடையவர்.

## वेगवान् ॥ ३७१ ॥

வேகத்தையுடையவர்.

## अमिताशनः ॥ ३७२ ॥

ஸம்ஹாரகாலத்தில் விசுவத்தையும் அசனம் செய்கிறவர்.

उद्भवः क्षोभणो देवः श्रीगर्भः परमेश्वरः ।
करणं कारणं कर्ता विकर्ता गहनो गुहः ॥ ५४ ॥

## उद्भवः ॥ ३७३ ॥

1. பிரபஞ்சத்தின் உத்பத்திக்கு உபாதான காரணர். 2. ஸம்ஸாரபயத்திலிருந்து விடுபட்டவர்.

## क्षोभणः ॥ ३७४ ॥

ஸ்ருஷ்டிகாலத்தில் பிரகிருதி, புருஷன் இவர்களை க்ஷோபம் செய்தவர். 'प्रकृतिं पुरुषं चैव प्रविश्यात्मेच्छया हरिः । क्षोभयामास भगवान्सर्गकाले व्ययाव्ययौ ॥' என்று விஷ்ணுபுராணம்.

## देवः ॥ ३७५ ॥

1. ஸர்க்கம் முதலானவைகளால் கிரீடை

செய்கிறவர். 2. அஸுரர் முதலானவர்களை ஜயிக்கிறவர். 3. ஸமஸ்தங்களிலும் 'நான்' என்று வியவஹரிக்கிறவர். பிரகாசிக்கிறவர். 4. பக்தர்களால் ஸ்துதிசெய்யப்படுகிறவர். 5. எங்கும் போகிறவர்.

## श्रीगर्भः ॥ ३७६ ॥

உதராந்தரத்தில் ஜகத்ரூபமான விபூதியையுடையவர்.

## परमेश्वरः ॥ ३७७ ॥

சிரேஷ்டராயும ஈசுவரராயுமிருக்கிறவர். 'समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।' என்று கீதை.

## करणम् ॥ ३७८ ॥

ஜகத்தின் உத்பத்தியில் முக்கியமான ஸாதகபூதர்.

## कारणम् ॥ ३७९ ॥

ஜகத்தின் உத்பத்திக்கு உபாதான காரணராயும் நிமித்த காரணராயுமிருக்கிறவர்.

## कर्ता ॥ ३८० ॥

ஸ்வதந்திரர்.

## विकर्ता ॥ ३८१ ॥

விசித்ர்மான ஜகத்திற்குக் கர்த்தா.

## गहनः ॥ ३८२ ॥

எவர்களாலுமறியமுடியாத ஸ்வரூபம், ஸாமர்த்தியம் இவைகளையுடையவர்.

## गुहः ॥ ३८३ ॥

மாயையால் ஸ்வரூபம் முதலானவைகளை மறைத்துக்கொண்டிருக்கிறவர் 'नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः' என்று கீதை.

व्यवसायो व्यवस्थानः संस्थानः स्थानदो ध्रुवः।
परर्द्धिः परमस्पष्टस्तुष्टः पुष्टः शुभेक्षणः ॥ ५५ ॥

## व्यवसायः ॥ ३८४ ॥

ஸம்வித்மாத்திரஸ்வரூபர் (ஞானஸ்வரூபர்.)

## व्यवस्थानः ॥ ३८५ ॥

ஸமஸ்த பிராணிகளுக்கும் அவ்யவஸ்தாபகர். ஸகலப் பிராணிகளுக்கும் ஸ்தானமாயிருக்றவர். 2. லோகபாலர் முதலான அதிகாரங்கள் ஜராயுஜம் (கர்பத்திலிருந்துண்டாகும் பிராணிகள்) அண்டஜம் (முட்டையிலிருந்துண்டாகும் ஜந்துக்கள்) உத்பிஜம் (முளையிலிருந்துண்டாகும் செடிகள்) இந்த ஜீவஜந்துக்கள், பிரம்ம

க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களான வர்ணங்கள் பிரம்மசர்யம் கார்ஹஸ்தியம், வானப்பிரஸ்தம், ஸந்நியாஸம் என ஆசிரமகர்மங்கள், இவைகளை ஸ்தாபிக்கிறவர்.

## संस्थानः ॥ ३८६ ॥

1. பூதங்களுக்குப் பிரளய ரூபமான ஸ்தானமாயிருக்கிறவர் 2. ஸமீசீனமான ஸ்தானத்தையுடையவர்.

## स्थानदः ॥ ३८७ ॥

துருவர் முதலான பக்தர்களுக்குக் கர்மானுரூபமான ஸ்தானத்தைக்கொடுக்கிறவர்.

## ध्रुवः ॥ ३८८ ॥

நாசரஹிதர்.

## परर्द्धिः ॥ ३८९ ॥

சிரேஷ்டமான விபூதியையுடையவர்.

## परमस्पष्टः ॥ ३९० ॥

1. சிரேஷ்டமான சோபையையுடையவராயும், ஞானஸ்வரூபத்தால் ஸ்பஷ்டராயுமிருக்கிறவர்.

## तुष्टः ॥ ३९१ ॥

பரமானந்த ஸ்வரூபர்.

## पुष्टः ॥ ३९२ ॥

ஸர்வஸம்பூர்ணர்.

## शुभेक्षणः ॥ ३९३ ॥

முமுக்ஷுக்கு மோக்ஷத்தைக்கொடுக்கக்கூடியதாயும், போகத்தை விரும்புகிறவர்களுக்கு போகத்தைக் கொடுக்கக்கூடியதாயும், பாபிகளின் ஸந்தேஹத்தை நிவர்த்திக்கக்கூடியதாயும், அவர்களை பரிசுத்தம் செய்யக்கூடியதாயும், அஜ்ஞானத்தை நிவர்த்திக்கக்கூடியதாயுமான சுபகாமான பார்வையையுடையவர்.

'भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः।' என்று ஸ்மிருதி.

रामो विरामो विरजो मार्गो नेयो नयोऽनयः।
वीरः शक्तिमतां श्रेष्ठो धर्मो धर्मविदुत्तमः ॥ ५६ ॥

## रामः ॥ ३९४ ॥

1. யோகிகளால் எப்பொழுதும் அனுபவிக்கப் படுகிற நித்யானந்தஸ்வரூபர். 'रमन्ते योगिनो यस्मिन्नित्यानन्दे चिदात्मनि। इति रामपदेनैतत् परं ब्रह्माभिधीयते ॥' என்று பத்மபுராணம். 2. ஸ்வேச்சையால் தசரதகுமாரராயவதரித்தவர்.

## विरामः ॥ ३९५ ॥

பிராணிகளின் லயத்திற்கு ஸ்தானமாயிருக்கிறவர்.

## विरजः ॥ ३९६ ॥

விஷயஸேவையில் ராகமில்லாதவர்.

## मार्गः ॥ ३९७ ॥

மோக்ஷத்தை அடைய மார்க்கபூதராயிருக்கிறவர். அதாவது பகவானுடைய யதார்த்தமான ஸ்வரூபத்தை அறிந்தால்தான் மோக்ஷம். ஆகையால் அவரே மார்க்கபூதர். 'नान्यः पन्था विद्यतेऽयनाय' என்று சுருதி.

## नेयः ॥ ३९८ ॥

பரமாத்மவிஷயமான நிலை பெற்ற ஞானத்தால் ஜீவனைத தன் ஸ்வரூபத்தை யடையும்படி செய்கிறவர்.

## नयः ॥ ३९९ ॥

பரமாத்மவிஷயத்தில் முமுக்ஷுக்களின் புத்தியைச் செலுத்துகிறவர்.

## अनयः ॥ ४०० ॥

தனக்கு ஒருவரும் நேதா (வழிகாட்டுகிறவன்) இல்லாதவர்.

## वीरः ॥ ४०१ ॥

விக்கிரமசாலியாயிருக்கிறவர்.

## शक्तिमतां श्रेष्ठः ॥ ४०२ ॥

அபரிமிதமான சக்தியையுடைய பிரம்மா முதலானவர்களுக்கெல்லாம் சிரேஷ்டர்.

## धर्मः ॥ ४०३ ॥

ஸர்வபூதங்களையும் தரிக்கிறவர் 'अणुरेषधर्मः' என்று சுருதி. 2. தர்மங்களாலாராதிக்கப் படுகிறவர்.

## धर्मविदुत्तमः ॥ ४०४ ॥

ஆக்ஞா ரூபங்களான சுருதிஸ்மிருதி இவைகளை யறிந்தவர்களுக்கெல்லாம் சிரேஷ்டர்.

वैकुण्ठः पुरुषः प्राणः प्राणदः प्रणवः पृथुः ।
हिरण्यगर्भः शत्रुघ्नो व्याप्तो वायुरधोक्षजः ॥ ९७ ॥

## वैकुण्ठः ॥ ४०५ ॥

ஜகத்தின் ஆரம்பத்தில் பிரிந்திருந்த பூதங்களை ஒன்று சேர்த்து அவைகளின் கதியை நிரோதம் செய்தவர். 'मया संश्लेषिता भूमिरद्भिर्व्योम च वायुना । वायुश्च तेजसा सार्धं वैकुण्ठत्वं ततो मम ॥' என்று சாந்திபர்வம்.

## पुरुषः ॥ ४०६ ॥

1. ஸகலத்தையுமபேக்ஷித்து புராணராயி ருக்கிறவர். 2. ஸமஸ்தபாபங்களையும் நாசம் செய்கிறவர். 'स यत्पूर्वोऽस्मात्सर्वस्मात्सर्वान्पाप्मन औषत्तस्मात्पुरुषः' என்று சுருதி. 3. ஸமஸ்தப் பிராணிகளின் சரீரத்திலிருக்கிறவர். 'स वा अयं पुरुषः सर्वासु पूर्षु पुरिशयः' என்று சுருதி.

## प्राणः ॥ ४०७ ॥

க்ஷேத்திரக்ஞரூபியாய் அல்லது பிராணாத்மகராய் சேஷ்டை செய்கிறவர். 'चेष्टां करोति श्वसनरूपेण' என்று விஷ்ணுபுராணம்.

## प्राणदः ॥ ४०८ ॥

பிரளயம் முதலான காலங்களில் பிராணிகளின் பிராணங்களைக் கண்டனம் செய்கிறவர்.

## प्रणवः ॥ ४०९ ॥

ओम् என்று பிரணவத்தால் நமஸ்கரிக்கப்படுகிறவர். 'प्रणमन्तीह यं वेदास्तस्मात्प्रणव उच्यते ।' என்று ஸநத்குமாரவசனம்.

## पृथुः ॥ ४१० ॥

பிரபஞ்சரூபியாய் விஸ்தாரத்தை யடைந்திருக்கிறவர்.

## हिरण्यगर्भः ॥ ४११ ॥

ஹிரண்யகர்ப்பரின் உத்பத்திக்குக் காரணமான ஹிரண்மயமான அண்டத்தை இருதயபத்திலுடையவர்.

## शत्रुघ्नः ॥ ४१२ ॥

1. இந்திரியங்களான சத்ருக்களை நாசம் செய்தவர். 2. அஸுரர்களை வதம் செய்தவர்.

## व्याप्तः ॥ ४१३ ॥

ஸமஸ்தமான காரியங்களான ஜகத் முதலானவைகளுக்குக் காரணரானபடியால் எங்கும் வியாபித்துக் கொண்டிருப்பவர்.

## वायुः ॥ ४१४ ॥

கந்தத்தை உண்டுபண்ணுகிறவர். 'पुण्यो गन्धः पृथिव्यां च' என்று கீதை.

## अधोक्षजः ॥ ४१५ ॥

1. எப்பொழுதும் நாசத்தை யடையாதவர் 'अधो न क्षीयते जातु यस्मात्तस्मादधोक्षजः।' என்று உத்யோகபர்வம். 2. ஆகாசம், ப்ருத்வீ இவைகளின் மத்தியில் வைராஜரூபராயுண்டானவர். 3. வெளியில் மனதை விடாமல் அடக்கப்பட்ட அந்த

நிந்திரியங்களுக்கு முன் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகிறவர். 'अधोभूते ह्यक्षगणे प्रत्यग्रूपप्रवाहिते । जायते तस्य वै ज्ञानं तेनाधोक्षज उच्यते ॥'

ऋतुः सुदर्शनः कालः परमेष्ठी परिग्रहः ।
उग्रः संवत्सरो दक्षो विश्रामो विश्वदक्षिणः ॥ ९८ ॥

## ऋतुः ॥ ४१६ ॥

ருது சப்தத்தால் குறிக்கப்படும் காலாத்மகர்.

## सुदर्शनः ॥ ४१७ ॥

1. நிர்வாண பலஞான ஞானத்தை யுடையவர். 2. தாமரைப்பூப்போல் நீண்ட அழகான நேத்திரங்களை யுடையவர். 3. ஸ்வேச்சையாய் அழகான தேஹத்தைத் தரித்துக்கொண்டு பக்தர்களால் எப்பொழுதும் ஸுலபமாய்ப் பார்க்கப்படுகிறவர்.

## कालः ॥ ४१८ ॥

'कालः कलयतामहम्' என்று கீதை. அதாவது எல்லாவற்றையும் எண்ணுகிறவர்.

## परमेष्ठी ॥ ४१९ ॥

பிரகிருஷ்டமான தன்னுடைய மஹிமையில் அதாவது இருதயாகாசத்தில் இருக்கிறவர்.

## परिग्रहः ॥ ४२० ॥

1. எங்கும் பரிபூர்ணரானபடியால் பக்தர்களால் எங்கும் கிரஹிக்கப்படுகிறவர். அறியப்படுகிறவர். 2. பக்தர்களால் அர்ப்பணம் செய்யப்படும் பத்திரம், புஷ்பம், பலம், தோயம் முதலானவைகளை ஸந்தோஷத்துடன் கிரஹிக்கின்றவர்.

## उग्रः ॥ ४२१ ॥

ஸூர்யன் முதலானவர்களுக்கும் பயஹேதுவாயிருக்கிறவர். 'भीषाऽस्माद्वातः पवते भीषोदेति सूर्यः' என்று சுருதி.

## संवत्सरः ॥ ४२२ ॥

பிராணிகள் வஸிக்கும் ஸ்தானமாயிருக்கிறவர்.

## दक्षः ॥ ४२३ ॥

ஜகத் ரூபராய் விருத்தியை யடைகிறவர். ஸமஸ்த காரியங்களையும் சீக்கிரத்தில் செய்து முடிக்கிறவர்.

## विश्रामः ॥ ४२४ ॥

ஸம்ஸார ஸாகரத்தில் பசி, தாகம், விஸனம், மயக்கம், மூப்பு, கிளைப்பு இவைகளான அலை

களால் இங்குமங்கும் தள்ளப்பட்டும் அக்ஞானம் முதலான மஹா கிலேசங்கள், மதம் முதலான உபக்கிலேசங்கள், இவைகளால் வசியப் படுத்தப் பட்டு சிரம பரிஹாரத்தை விரும்பும் முமுக்ஷுக் களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கிறவர்.

## विश्वदक्षिणः ॥ ४२५ ॥

ஸகலரையும் அபேக்ஷித்து ஸமர்த்தர். அல்லது ஸமஸ்த காரியங்களிலும் ஸமர்த்தர்.

विस्तारः स्थावरस्थाणुः प्रमाणं बीजमव्ययम् ।
अर्थोऽनर्थो महाकोशो महाभोगो महाधनः ॥५९॥

## विस्तारः ॥ ४२६ ॥

ஸமஸ்தமான ஜகத்தும் தன்னிடத்தில் விஸ்தாரத்தை படையும்படியான ஸ்வரூபத்தை யுடையவர்.

## स्थावरस्थाणुः ॥ ४२७ ॥

எப்பொழுதும் ஸ்திரராயும், ஸகலத்திற்கும் இருப்பிடமாயுமிருக்கிறவர்.

## प्रमाणम् ॥ ४२८ ॥

ஞான ரூபியாயிருக்கிறவர் அல்லது பிரத்தியக்ஷம் முதலான பிரமாணரூபரா யிருக்கிறவர்.

## बीजमव्ययम् ॥ ४२९ ॥

ஸ்ருஷ்டியில் வியதிரேகம் அதாவது வித்தி யாஸமில்லாமல் முன் போலவே கார்யங்களை புண் டாக்கும் அழிவில்லாத காரணரூபியா யிருக்கிற வர்.

## अर्थः ॥ ४३० ॥

ஆனந்தரூபரா யிருக்கிறபடியால் ஸமஸ்தப் பிராணிகளாலும் பிரார்த்திக்கப் படுகிறவர்.

## अनर्थः ॥ ४३१ ॥

ஆப்தகாமரானபடியால் அபேக்ஷிக்கவேண் டிய பிரயோஜனமே இல்லாதவர்.

## महाकोशः ॥ ४३२ ॥

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக் ஞானமயம், ஆனந்தமயம் என்ற ஐந்து கோசங்க ளையுடையவர்,

## महाभोगः ॥ ४३३ ॥

மஹத்தான ஸ்வரூபமான போகத்தை யு டையவர்.

## महाधनः ॥ ४३४ ॥

மஹத்தான போகஸாதனலக்ஷணமான தன த்தை யுடையவர்.

अनिर्विण्णः स्थविष्ठोऽभूर्धर्मयूपो महामखः ।
नक्षत्रनेमिर्नक्षत्री क्षमः क्षामः समीहनः ॥ ४७ ॥

## अनिर्विण्णः ॥ ४३५ ॥

ஆப்த காமரானபடியால் நிர்வேதமே இல்லா தவர். அதாவது துக்கமேயில்லாதவர்.

## स्थविष्ठः ॥ ४३६ ॥

வைராஜரூபராயிருக்கிறவர். 'अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ ' என்று சுருதி.

## अभूः ॥ ४३७ ॥

ஜன்மரஹிதர். அல்லது भूः என்று பதம். பூமிரூபராயிருக்கிறவர்.

## धर्मयूपः ॥ ४३८ ॥

யூபத்தில் பசுபோல் ஆராதனாத்மகங்களான தர்மங்கள் பரமாத்மாவிடத்தில் கட்டப் படுகின் றன. அதாவது தர்மங்களுக்கு யூபஸ்தம்பம் போலிருக்கிறவர்.

## महामखः ॥ ४३९ ॥

தன்னிடத்தில் அர்ப்பணம் செய்யப்படும்

யாகங்களால் நிர்வாணலக்ஷணமான மஹத்தான பலனைக் கொடுக்கிறவர்.

## नक्षत्रनेमिः ॥ ४४० ॥

சிம்சுமாரசக்கரம் என்னும் நக்ஷத்திரமண்டலத்தைச் சக்கரத்தின் நடுவில் குடம்போலிருந்து நடத்துகிறவர்.

## नक्षत्री ॥ ४४१

சந்திரரூபராயிருக்கிறவர். 'नक्षत्राणामहं शशी' என்று கீதை.

## क्षमः ॥ ४४२ ॥

1. ஸமஸ்த காரியங்களிலும் ஸமர்த்தர் 2. பொறுமையை யுடையவர். 'क्षमया पृथिवीसमः' என்று ராமாயணம்.

## क्षामः ॥ ४४३ ॥

ஸர்வவிகாரங்களும் நாசத்தையடைந்தும் ஸ்வயம் ஆத்மஸ்வரூபராயிருக்கிறவர்.

## समीहनः ॥ ४४४ ॥

ஸ்ருஷ்டிமுதலானவைகளில் விருப்பத்தையுடையவர்.

यज्ञ इज्यो महेज्यश्च क्रतुः सत्रं सतांगतिः ।
सर्वदर्शी विमुक्तात्मा सर्वज्ञो ज्ञानमुत्तमम् ॥ ६१ ॥

## यज्ञः ४४५ ॥

1. ஸர்வயக்ஞஸ்வரூபர். 2. ஸமஸ்த தேவதைகளுக்கும் ஸந்தோஷத்தைக் கொடுக்கிற யக்ஞஸ்வரூபியாயிருக்கிறவர். 'यज्ञो वै विष्णुः' என்று சுருதி.

## इज्यः ॥ ४४६ ॥

யக்ஞபலனைக் கொடுக்கிறபடியால் யக்ஞத்திற்கு விஷயர். 'ये यजन्ति मन्त्रैः पुण्यैर्देवतादीन्पितॄनपि । आत्मानमात्मना नित्यं विष्णुमेव यजन्ति ते' என்று ஹரிவம்சம்.

## महेज्यः ॥ ४४७ ॥

யாகங்களுக்கு விஷயர்களான ஸமஸ்த தேவதைகளுக்குள் சிரேஷ்டர்.

## क्रतुः ॥ ४४८ ॥

யூபத்துடன் கூடின யக்ஞ ரூபர்.

## सत्रम् ॥ ४४९ ॥

ஸாதுக்களைக் காப்பாற்றுகிறவர்.

## सतांगतिः ॥ ४५० ॥

முமுக்ஷுக்களுக்கு முக்கியமான கதியாயிருக்கிறவர்.

## सर्वदर्शी ॥ ४५१ ॥

தன்னுடைய ஸ்வாபாவிகமான ஞானத்தால் ஸமஸ்தப் பிராணிகளாலும் அனுஷ்டிக்கப்பட்ட புண்ணியபாபங்களைப் பிரத்தியக்ஷமாய் அறிகிறவர்.

## विमुक्तात्मा ॥ ४५२ ॥

ஸ்வயமாய் விமுக்தமான ஆத்மாவையுடையவர்.

## सर्वज्ञः ॥ ४५३ ॥

எங்கும் பரிபூர்ணராயும் ஸகலத்தையுமறிகிறவராயுமிருக்கிறவர்.

## ज्ञानमुत्तमम् ॥ ४५४ ॥

அஜன்யமாயும், அனவச்சின்னமாயும், சிரேஷ்டமாயுமிருக்கிற ஞானஸ்வரூபர். 'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म' என்று சுருதி.

सुव्रतः सुमुखः सूक्ष्मः सुघोषः सुखदः सुहृत् ।
मनोहरो जितक्रोधो वीरबाहुर्विदारणः ॥ ६१ ॥

## सुव्रतः ॥ ४५५ ॥

சிரேஷ்டமான அபயப்பிரதானரூபமான விரதத்தையுடையவர். 'सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते । अभयं सर्वथा तस्मै ददाम्येतद्व्रतं मम' என்று ராமாயணத்தில் ஸ்ரீராமருடைய வசனம்.

## सुमुखः ॥ ४५६ ॥

1. அழகான முகத்தையுடையவர். 'प्रसन्नवदनं चारु पद्मपत्रायतेक्षणम्' என்று விஷ்ணுபுராணம். 2. வனவாஸகாலத்திலும் கொஞ்சங்கூட வாடாமலிருந்த முகத்தையுடைய ஸ்ரீராமர்: 'न वनं गन्तुकामस्य त्यजतश्च वसुन्धराम् । सर्वलोकातिगस्यैव मनो रामस्य विव्यथे ॥' என்று ராமாயணம். 3. ஸமஸ்த வித்தைகளுக்கும் உபதேஷ்டா. 'यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै' என்று சுருதி.

## सूक्ष्मः ॥ ४५७ ॥

ஆகாசம் முதலியவைகளைப்போல் ஸ்தூலமாகச் செய்யும் சப்தம் முதலியவை இல்லாதவர். 'सर्वगतं सूक्ष्मं' என்று சுருதி.

## सुघोषः ॥ ४५८ ॥

1. வேதாத்மகமான சோபனமான சப்தத்தையுடையவர். 2. மேககர்ஜனம்போல் கம்பீரமான த்வனியையுடையவர்.

## सुखदः ॥ ४५९ ॥

1. ஸாதுக்களுக்கு ஸுகத்தைக்கொடுக்கிறவர். 2. துஷ்டர்களின் ஸுகத்தைக் கண்டிக்கிறவர்.

## सुहृत् ॥ ४६० ॥

பிரதி உபகாரத்தை அபேக்ஷியாமல் உபகாரம் செய்கிறவர்.

## मनोहरः ॥ ४६१ ॥

நிரதிசயானந்தரூபியானபடியால் தன் ஸ்வரூபத்தையறிந்தவர்களின் மனதைப்பஹரிக்கிறவர். 'यो वै भूमा तत्सुखं नाल्पे सुखमस्ति' என்று சுருதி.

## जितक्रोधः ॥ ४६२ ॥

கோபத்தை ஜயித்தவர்.

## वीरबाहुः ॥ ४६३ ॥

வேதங்களின் மரியாதையை ஸ்தாபிக்கும் பொருட்டு வேதவிரோதிகளான அஸுரர்களைக் கொன்று விக்கிரமத்துடன் கூடிய பாஹுக்களையுடையவர்.

## विदारणः ॥ ४६४ ॥

தார்மிகர்களல்லாத துஷ்டர்களைத் தண்டிக்கிறவர்.

स्वापनः स्ववशो व्यापी नैकात्मा नैककर्मकृत् ।
वत्सरो वत्सलो वत्सी रत्नगर्भो धनेश्वरः ॥ ६३ ॥

## स्वापनः ॥ ४६५ ॥

பிராணிகளைத்தன் மாயையால் தன்னை அறியாமல் தூங்கும்படி செய்கிறவர்.

## स्ववशः ॥ ४६६ ॥

ஜகத்தின் உத்பத்தி, ஸ்திதி, லயம் இவைகளுக்குக் காரணரானபடியால் ஸ்வதந்திரர்.

## व्यापी ॥ ४६७ ॥

ஆகாசம்போல் எங்கும் வியாபித்திருக்கிறவர். 'आकाशवत् सर्वगतश्च नित्यः' என்று சுருதி.

## नैकात्मा ॥ ४६८ ॥

தன்னுடைய மஹிமையால் அநேக ரூபராயிருக்கிறவர்.

## नैककर्मकृत् ॥ ४६९ ॥

ஜகத்தின் உத்பத்தி, ஸம்பத்து, விபத்து முதலான காரியங்களைச் செய்கிறவர்.

## वत्सरः ॥ ४७० ॥

ஸகலப் பிராணிகளுக்கும் வஸதிஸ்தானமாயிருக்கிறவர்.

## वत्सलः ॥ ४७१ ॥

பக்தர்களிடத்தில் வாத்ஸல்யத்தையுடையவர்.

## वत्सी ॥ ४७२ ॥

1. கிருஷ்ணாவதாரத்தில் கன்றுகளை மேய்ப்பவர். 2. ஜகத்திலுள்ள பிராணிகளான வத்ஸர்களுக்குப் பிதா போலிருக்கிறவர்.

## रत्नगर्भः ॥ ४७३ ॥

ரத்னங்களை கர்ப்பத்திலுடைய ஸமுத்திரர்

## धनेश्वरः ॥ ४७४ ॥

தனங்களுக்கு ஈசுவரர்.

धर्मगुब्धर्मकृद्धर्मी सदसत्क्षरमक्षरम् ।
अविज्ञाता सहस्रांशुर्विधाता कृतलक्षणः ॥ ६४ ॥

## धर्मगुप् ॥ ४७५ ॥

தர்மத்தை ஸம்ரக்ஷிக்கிறவர். 'धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे' என்று கீதை.

## धर्मकृत् ॥ ४७६ ॥

தர்மம், அதர்மம் இவைகளில்லாதவராயிருந்தும் தர்மத்தின் மரியாதையை ஸ்தாபிக்கும் பொருட்டு தர்மத்தை யநுஷ்டிக்கிறவர்.

## धर्मी ॥ ४७७ ॥

தர்மங்களைத் தரிக்கிறவர்.

## सत् ॥ ४७८ ॥

சுத்த பரப்பிரம்மம். 'सदेव सौम्येदमग्र आसीत्' என்று சுருதி.

## असत् ॥ ४७९ ॥

பிரபஞ்சரூபியாயிருக்கிற அபரமான பிரம்மம்.

## क्षरम् ॥ ४८० ॥

நாசத்தையடையக்கூடிய ஸமஸ்த பூதங்களாயிருக்கிறவர்.

## अक्षरम् ॥ ४८१ ॥

கூடஸ்தர். 'क्षरः सर्वाणि भूतानि कुटस्थोऽक्षर उच्यते' என்று கீதை.

## अविज्ञाता ॥ ४८२ ॥

நான் கர்த்தா, போக்தா என்று கல்பிதமான வாஸனையையுடையவன் ஜீவாத்மா. அது இல்லாதவன் பரமாத்மா.

## सहस्रांशुः ॥ ४८३ ॥

ஸூர்யன் முதலியவற்றிலுள்ள கிரணங்கள் பரமாத்மாவுடையவைகளாகையால் முக்கியமான ஸூர்யன். அளவற்ற கிரணங்களையுடைய

வர். 'येन सूर्यस्तपति तेजसेद्धः' என்று சுருதி. 'यदादित्यगतं तेजः' என்று கீதை.

## विधाता ॥ ४८४ ॥

பூமியைத் தரிக்கின்ற சேஷர், திக்கஜங்கள், பர்வதங்கள் இவைகளை ஸ்ருஷ்டிக்கிறவர்.

## कृतलक्षणः ॥ ४८५ ॥

1. எப்பொழுதும் ஸித்தியாயிருக்கிற சைதன்யஸ்வரூபர். 2. ஸகல சாஸ்திரங்களையும் செய்தவர். 'वेदाः शास्त्राणि विज्ञानमेतत्सर्वं जनार्दनात्' என்று சொல்லப்படுகிறது. 3. ஸஜாதீயம், விஜாதீயம் இவைகளின் வியவச்சேதத்தைச் செய்தவர். 4. ஸ்ரீவத்ஸத்தை மார்பிலணிந்து கொண்டிருக்கிறவர்.

गभस्तिनेमिः सत्वस्थः सिंहो भूतमहेश्वरः ।
आदिदेवो महादेवो देवेशो देवभृद्गुरुः ॥ ६५ ॥

## गभस्तिनेमिः ॥ ४८६ ॥

கபஸ்திசக்கரத்தின் மத்தியில் ஸௌர்யரூபராயிருக்கிறவர்.

## सत्वस्थः ॥ ४८७ ॥

1. பிரகாசமான ஸத்துவகுணத்தையே பிர

தானமாயுடையவர். 2. ஸமஸ்தப் பிராணிகளி டத்திலுமிருக்கிறவர்.

## सिंहः ॥ ४८८ ॥

விக்ரமசீலரானபடியால் ஸிம்மம் போலிருக் கிறவர். "ஸத்தியபாமா" என்பதற்கு 'பாமா' என்று சொல்வது போல் 'नृसिंहः' என்று சொல் வதற்கு सिंहः என்று சொல்லப்பட்டது. நரஸிம் மரூபியாய் அவதரித்தவர்.

## भूतमहेश्वरः ॥ ४८९ ॥

1. பூதங்களுக்கெல்லாம் சிரேஷ்டரான ஈசு வரர். 2. உண்மையில் பரமேசுவரராகவே இருக்கிறவர்.

## आदिदेवः ॥ ४९० ॥

ஸமஸ்த பூதங்களையும் கிரஹிக்கிரவராயும் அவைகளுக்கெல்லாம் தேவராயுமிருக்கிறவர்.

## महादेवः ॥ ४९१ ॥

ஸமஸ்தமான பாவ (भाव)ங்களையும் விட்டு மஹத்தான ஆத்மஞானயோகத்தின் ஐசுவரியத் திலேயே இருக்கிறவர்.

## देवेशः ॥ ४९२ ॥

பிராதான்யமாய் தேவர்களுக்கெல்லாம் ஈசர்.

## देवभृद्गुरुः ॥ ४९३ ॥

தேவர்களையெல்லாம் காப்பாற்றுகின்ற இந்திரனுக்கும் குரு.

उत्तरो गोपतिर्गोप्ता ज्ञानगम्यः पुरातनः ।
शरीरभूतभृद्भोक्ता कपीन्द्रो भूरिदक्षिणः ॥ ६६ ॥

## उत्तरः ॥ ४९४ ॥

1. ஜன்மஸம்ஸாரபந்தத்திலிருந்து தாண்டினவர். 2. ஸர்வோத்க்ருஷ்டர். 'विश्वस्मा-दिन्द्र उत्तरः' என்று சுருதி.

## गोपतिः ॥ ४९५ ॥

1. கோபவேஷத்தையுடையவர். 2. பூமியின் பதி.

## गोप्ता ॥ ४९६ ॥

ஸமஸ்த பூதங்களையும் காப்பாற்றுகிறவர்.

## ज्ञानगम्यः ॥ ४९७ ॥

ஞானத்தால் மட்டும் அறியக்கூடியவர்.

## पुरातनः ॥ ४९८ ॥

காலபரிச்சேதரஹிதராயிருக்கிற புராதனர்

## शरीरभूतभृत् ॥ ४९९ ॥

சரீரங்களின் ஆரம்பத்திற்குக் காரணமான மஹாபூதங்களைப் பரிக்கிறபடியால் பிராணரூபத்தைத் தரிக்கிறவர்.

## भोक्ता ॥ ५०० ॥

1. பாலகர். 2. நிரதிசயானந்தத்தையனுபவிக்கிறவர்.

## कपीन्द्रः ॥ ५०१ ॥

1. வராகமூர்த்தியாயிருக்கிறவர். 2. வானரங்களுக்கெல்லாம் இந்திரரான ராகவர்.

## भूरिदक्षिणः ॥ ५०२ ॥

தர்ம மரியாதையைக் காண்பித்துக்கொண்டு யக்ஞத்தை அனுஷ்டிக்கிறவனுக்கு அதிகமான யக்ஞதக்ஷிணையாக இருக்கிறவர்.

सोमपोऽमृतपः सोमः पुरुजित्पुरुसत्तमः ।
विनयो जयः सत्यसन्धो दाशार्हः सात्वतांपतिः ॥

## सोमपः ॥ ५०३ ॥

ஸமஸ்த யக்ஞங்களிலும் திருப்தி செய்யப்பட்டவரானபடியால் யக்ஞங்களில் தேவதாரூபியாய் ஸோமத்தைப் பானம் செய்கிறவர்.

## अमृतपः ॥ ५०४ ॥

1. ஸ்வாத்மானந்தரூபமான அமிர்தத்தைப் பானம் செய்கிறவர். 2. க்ஷீரஸாகரத்திலிருந்து கடையப்பட்டதாயும், அஸுரர்களால் அபஹரிக்கப்பட்டதாயுமான அமிர்தத்தை ரக்ஷித்து தேவர்களுக்குக் கொடுத்துத் தானும் பானம் செய்தவர்.

## सोमः ॥ ५०५ ॥

1. சந்திரரூபியாய் ஓஷதிகளைப் போஷிக்கிறவர். 2. பார்வதீஸமேதராயிருக்கிற பரமேசுவரர்.

## पुरुजित् ॥ ५०६ ॥

அநேகர்களை ஜயித்தவர்.

## पुरुसत्तमः ॥ ५०७ ॥

விசுவரூபியாயும் ஸர்வோத்கிருஷ்டராயுமிருக்கிறவர்.

## विनयः ॥ ५०८ ॥

துஷ்டர்களுக்குத் தகுந்த தண்டனையை விதிக்கிறவர்.

## जयः ॥ ५०९ ॥

ஸமஸ்த பூதங்களையும் ஜயிக்கிறவர்.

## सत्यसंधः ॥ ५१० ॥

ஸத்தியமான ஸங்கல்பத்தையுடையவர். 'सत्य-काम: सत्यसंकल्प: ' என்று சுருதி.

## दाशार्हः ॥ ५११ ॥

1. தானத்திற்கு யோக்கியர். 2. 'தசார்ஹர்' என்ற யாதவகுலத்திலுண்டானவர்.

## सात्त्वतांपतिः ॥ ५१२ ॥

'ஸாத்துவதம' என்ற தந்திரத்தைச் செய்தவர்களுக்கும், சொல்லுகிறவர்களுக்கும் பதி. அதாவது யோகக்ஷேமத்தைச் செய்கிறவர்.

जीवो विनयिता साक्षी मुकुन्दोऽमितविक्रमः ।
अम्भोनिधिरनन्तात्मा महोदधिशयोऽन्तकः ॥ ६८ ॥

## जीवः ॥ ५१३ ॥

க்ஷேத்திரக்ஞரூபியாய் பிராணங்களைத் தரிக்கிறவர்.

## विनयितासाक्षी ॥ ५१४ ॥

தன்னிடத்தில் பிரஜைகளுக்குள்ள வணக்கத்தை ஸாக்ஷாத்தாயறிகிறவர்.

## मुकुन्दः ॥ ५१५ ॥

முக்தியைக்கொடுக்கிறவர்.

## अमितविक्रमः ॥ ५१६ ॥

1. அபரிச்சின்னமான மூன்று பாதவிக்ஷேபங்களையுடையவர். 2. அபரிமிதமான சௌர்யத்தையுடையவர்.

## अम्भोनिधिः ॥ ५१७ ॥

தேவர், மனுஷ்யர், பித்ருக்கள், அஸுரர்கள் இவர்களை இருதயத்திலுடையவர். 'तानि वा एतानि चत्वार्यम्भांसि । देवा मनुष्याः पितरोऽसुराः' என்று சுருதி. 2. ஸமுத்திரரூபர். 'सरसामस्मि सागरः' என்று கீதை.

## अनन्तात्मा ॥ ५१८ ॥

தேசம், காலம், வஸ்து இவைகளால் பரிச்சின்னமில்லாதவர். அதாவது, எந்த இடத்திலும், எந்தக்காலத்திலும் எந்த வஸ்துவிலுமிருக்கிறவர்.

## महोदधिशयः ॥ ५१९ ॥

ஸமஸ்த பூதங்களையும் ஸம்ஹரித்து ஜகத்தை ஒரே சமுத்திரமாகச் செய்து அதில் சயனித்திருக்கிறவர்.

अन्तकः ॥ ५२० ॥

ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தத்தைச் செய்கிறவர்.

अजो महार्हः स्वाभाव्यो जितामित्रः प्रमोदनः ।
आनन्दो नन्दनोऽनन्दः सत्यधर्मा त्रिविक्रमः ॥६९॥

अजः ॥ ५२१ ॥

மஹாவிஷ்ணுவிடமிருந்துண்டான காமர்.

महार्हः ॥ ५२२ ॥

பூஜார்ஹர்.

स्वाभाव्यः ॥ ५२३ ॥

நித்ய நிஷ்பன்னரானபடியால் ஸ்வபாவமாய் ஜனனமில்லாதவர்.

जितामित्रः ॥ ५२४ ॥

அந்தர்வர்த்திகளான ராகம், த்வேஷம் முதலான சத்ருக்களையும் பஹிர்வர்த்திகளான ராவணன், கும்பகர்ணன், சிசுபாலன் முதலான சத்ருக்களையும் ஜயித்தவர்.

प्रमोदनः ॥ ५२५ ॥

1. ஸ்வாத்மாம்ருதரஸத்தின் ஆஸ்வாதத்தி

ளுலேயே எப்பொழுதும் திருப்தியையடைகிற வர். 2. தன்னைத் தியானம் செய்கிறவர்களுக்குத் தியானம் செய்த மாத்திரத்திலேயே ஆனந்தத்தைக் கொடுக்கிறவர்.

## आनन्दः ॥ ५२६ ॥

ஆனந்த ஸ்வரூபத்தையுடையவர். 'एतस्यै वानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति' என்று சுருதி.

## नन्दनः ॥ ५२७ ॥

ஸந்தோஷம் செய்துவைக்கிறவர்.

## नन्दः ॥ ५२८ ॥

1. ஸமிருத்தர். அல்லது अनन्दः என்று பதம். 2. விஷயசுகமே இல்லாதவர். 'यो वै भूमा तत्सुखं नाल्पे सुखमस्ति' என்று சுருதி.

## सत्यधर्मा ॥ ५२९ ॥

ஸத்தியமான ஞானம் முதலான குணங்களை யுடையவர்.

## त्रिविक्रमः ॥ ५३० ॥

1. மூன்று லோகங்களிலும் வியாபித்திருக்கிற மூன்று பாதவிக்ஷேபங்களை யுடையவர். 'त्रीणि पदा विचक्रमे' என்று சுருதி. 2. மூன்று

லோகங்களையும் வியாபித்துக்கொண்டிருக்கிறவர்.

महर्षिःकपिलाचार्यः कृतज्ञो मेदिनीपतिः ।
त्रिपदस्त्रिदशाध्यक्षो महाशृङ्गः कृतान्तकृत् ॥७०॥

## महर्षिःकपिलाचार्यः ॥ ५३१ ॥

நான்கு வேதங்களையும் அறிந்த மஹர்ஷியாயும், சுத்த தத்துவவிக்ஞானத்திற்கு ஆசார்யராயுமான கபிலர். 'शुद्धात्मतत्त्वविज्ञानं सांख्यमित्यभिधीयते ।' என்று வியாஸஸ்மிருதி. 'ऋषिप्रसूतं कपिलं महान्तम्' என்று சுருதி. 'सिद्धानां कपिलो मुनिः' என்று கீதை.

## कृतज्ञः ॥ ५३२ ॥

ஜகத்ஸ்வரூபராயும் பரமாத்மஸ்வரூபராயுமிருக்கிறவர்.

## मेदिनीपतिः ॥ ५३३ ॥

பூமியின் பதி.

## त्रिपदः ॥ ५३४ ॥

மூன்று பாதங்களையுடையவர். 'त्रीणि पदा विचक्रमे' என்று சுருதி.

## त्रिदशाध्यक्षः ॥ ५३५ ॥

ஸத்துவ ரஜஸ் தமோ குணங்களாலுண்டான ஜாக்கிரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளுக்கு அத்தியக்ஷர்.

## महाशृङ्गः ॥ ५३६ ॥

மத்ஸ்யரூபியாய் பிரளய ஸமுத்திரத்தில் ஓடமாகிய பூமியைக்கட்டி விளையாடுகிறவர்.

## कृतान्तकृत् ॥ ५३७ ॥

1. தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஜகத்தை ஸம்ஹரிக்கிறவர். 2. யமனையும் ஸம்ஹாரம் செய்கிறவர்.

महावराहो गोविन्दः सुषेणः कनकाङ्गदी ।
गुह्यो गभीरो गहनो गुप्तश्चक्रगदाधरः ॥ ७१ ॥

## महावराहः ॥ ५३८ ॥

மஹத்தான வராஹரூபியாயிருக்கிறவர்.

## गोविन्दः ॥ ५३९ ॥

வேதாந்த வாக்கியங்களால் அறியக் கூடியவர். 'गोभिरेव यतो वेद्यो गोविन्दः स उदाहृतः ।' என்று விஷ்ணு திலகம்.

## सुषेणः ॥ ५४० ॥

தன் கணங்களான நல்ல ஸேனையையுடைய வர்.

## कनकाङ्गदी ॥ ५४१ ॥

கனகமயமான அங்கதங்களையுடையவர்.

## गुह्यः ॥ ५४२ ॥

1. ரஹஸ்யமான உபநிஷத்வித்தையால் அறியக்கூடியவர். 2. ஹிருதயாகாசமான குஹையிலிருக்கிறவர்.

## गभीरः ॥ ५४३ ॥

ஞானம், ஐசுவரியம் முதலானவைகளால் கம்பீரமாயிருக்கிறவர்.

## गहनः ॥ ५४४ ॥

பிரவேசிக்கமுடியாதவர், அதாவது, அறியமுடியாதவர்.

## गुप्तः ॥ ५४५ ॥

வாக்குக்கும் மனதற்குமெட்டாதவர். ‘ एष सर्वेषु भूतेषु गूढोऽऽत्मा न दृश्यते ’ என்று சுருதி.

## चक्रगदाधरः ॥ ५४६ ॥

மனஸ்தத்துவாத்மகமான சக்கரம், புத்திதத்துவாத்மகமான கதை இவைகளைத்தரித்துக்கொண்

டிருக்கிறவர். 'मनस्तत्त्वात्मकं चक्रं बुद्धितत्त्वात्मकां गदाम् । धारयन् लोकरक्षार्थमुक्तश्चक्रगदाधरः ॥'

वेधाः स्वाङ्गोऽजितः कृष्णो दृढः संकर्षणोऽच्युतः ।
वरुणो वारुणो वृक्षः पुष्कराक्षो महामनाः ॥ ७२ ॥

## वेधाः ॥ ५४७ ॥

ஜகத்தின் ஸ்ருஷ்டிகர்த்தா.

## स्वाङ्गः ॥ ५४८ ॥

காரியங்களைச் செய்வதில் தானே ஸஹகாரியாயிருக்கிறவர்.

## अजितः ॥ ५४९ ॥

எந்த அவதாரங்களிலும் அபஜயத்தையடையாதவர்.

## कृष्णः ॥ ५५० ॥

கிருஷ்ணத்வைபாயனர். 'कृष्णद्वैपायनं व्यासं विद्धि नारायणं विभुम् । कोऽन्यः पुण्डरीकाक्षान्महाभारतकृद्भवेत् ॥' என்று விஷ்ணுபுராணம்.

## दृढः ॥ ५५१ ॥

ஸ்வரூபம், ஸாமர்த்தியம் முதலானவைகளினின்று எப்பொழுதும் நழுவாமலிருக்கிறவர்.

## संकर्षणोऽच्युतः ५५२ ॥

பிரளயகாலத்தில் ஸ்வயம் நாசரஹிதராய் பிரஜைகளை ஒரேகாலத்தில் இழுக்கிறவர்.

## वरुणः ॥ ५५३ ॥

ஸாயங்காலத்தில் வருணனுடைய திக்கையடைந்த ஸூர்யஸ்வரூபர்.

## वारुणः ॥ ५५४ ॥

வருணனுடைய புத்திரரான வஸிஷ்டர், அகஸ்தியர், இவர்களுடைய ரூபமாயிருக்கிறவர்.

## वृक्षः ॥ ५५५ ॥

விருக்ஷம்போல் அசலராயிருக்கிறவர். 'वृक्ष-वत् स्तब्धो दिवि तिष्ठत्येकः' என்று சுருதி.

## पुष्कराक्षः ॥ ५५६ ॥

ஹிருதயகமலத்தில் தியானம் செய்யப்பட்டு சித்ஸ்வரூபராய்ப்பிரகாசிக்கிறவர்.

## महामनाः ॥ ५५७ ॥

ஸ்ருஷ்டி, ஸ்திதி, அந்தம் இவைகளை நினைத்த மாத்திரத்திலேயே செய்யக்கூடிய மனதையுடையவர். 'मनसैव जगत्सृष्टिं संहारं च करोति यः' என்று விஷ்ணுபுராணம்.

भगवान्भगहा नन्दी वनमाली हलायुधः ।
आदित्यो ज्योतिरादित्यः सहिष्णुर्गतिसत्तमः ॥७३॥

## भगवान् ॥ ५५८ ॥

1. பூர்ணமான ஐசுவரியம், தர்மம், கீர்த்தி, லக்ஷ்மீ, வைராக்கியம, மோக்ஷம் இந்த ஆறுவித ஸம்பததையுடையவர். 2. பூதங்களின் உத்பத்தி, பிரளயம், ஞானம, அக்ஞானம் இவைகளை அறிகிறவர்.

## भगहा ॥ ५५९ ॥

ஸம்ஹாரகாலத்தில் ஐசுவரியம் முதலானவைகளை நாசம் செய்கிறவர்.

## आनन्दी ॥ ५६० ॥

1. ஸுகஸ்வரூபராயிருக்கிறவர். 2 ஸர்வ ஸம்பத் ஸமிருத்தர்.

## वनमाली ॥ ५६१ ॥

பஞ்சபூதங்களின் தன் மாத்திரங்களால் நிர்மாணம் செய்யப்பட்ட வைஜயந்தி என்ற வனமாலையையுடையவர்.

## हलायुधः ॥ ५६२ ॥

கலப்பையை ஆயுதமாயுடைய பலபத்திரரூபர்.

## आदित्यः ॥ ५६३ ॥

காசியபரிடமிருந்து அதிதியினிடம் வாமனரூபராயவதரித்தவர்.

## ज्योतिरादित्यः ॥ ५६४ ॥

ஸூர்யமண்டலத்தில் ஆதித்திய ரூபராயிருக்கிறவர்.

## सहिष्णुः ॥ ५६५ ॥

சீதம், உஷ்ணம், லாபம், துக்கம் இவைகளை ஸஹிக்கிறவர்.

## गतिसत्तमः ॥ ५६६ ॥

ஸகலராலும் சரணாகதியடையக்கூடிய சிரேஷ்டர்.

सुधन्वा खण्डपरशुर्दारुणो द्रविणप्रदः ।
दिवःस्पृक्सर्वदृग्व्यासो वाचस्पतिरयोनिजः ॥ ७४ ॥

## सुधन्वा ॥ ५६७ ॥

இந்திரியாதிமயமான சோபனமான சார்ங்கம் என்ற தனுஸ்ஸையுடையவர்.

## खण्डपरशुः ॥ ५६८ ॥

1. சத்துருக்களைக் கண்டிக்கக்கூடிய பரசு

வையுடைய பாசுராமர். 2. பேதிக்கமுடியாத பாசுவையுடைய பரமசிவர். (இவ்விடத்தில் அ-ஃண்டபரஶு: என்று பதம்.

## दारुणः ॥ ५६९ ॥

ஸன்மார்க்கவிரோதிகளிடத்தில் தாருணராயிருக்கிறவர்.

## द्रविणप्रदः ॥ ५७० ॥

பக்தர்களுக்கு அபீஷ்டமான தனத்தைக் கொடுக்கிறவர்.

## दिवःस्पृक् ॥ ५७१ ॥

ஆகாசம்வரையில் வியாபித்திருக்கிறவர்.

## सर्वदृग्व्यासः ॥ ५७२ ॥

1. ஸமஸ்த ஞானங்களையும் விஸ்தாரப்படுத்துகிறவர். 2. ஸர்வ ஞானத்தையுடையவராயும், வேதங்களை ருக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்று நான்குவிதங்களாக விஸ்தாரப்படுத்தினவராயுமான பிரம்மா. இதில் ருக்வேதத்தை 21-சாகைகளாயும், யஜுர்வேதத்தை 101-சாகைகளாயும், ஸாமவேதத்தை 1000-சாகைகளாயும் அதர்வவேதத்தை 9-சாகைகளாயும் பிரித்து விஸ்தாரப்படுத்தியிருக்கிறார்.

## वाचस्पतिरयोनिजः ॥ ५७३ ॥

யோனியில் ஜன்மத்தையடையாத வித்தைக்கு அதிபதி.

त्रिसामा सामगः साम निर्वाणं भेषजं भिषक् ।
सन्यासकृच्छमः शान्तो निष्ठा शान्तिः परायणम् ॥

## त्रिसामा ॥ ५७४ ॥

ஸாமகர்களால் தேவவிரதமென்ற மூன்று ஸாமங்களால் ஸ்துதி செய்யப்பட்டவர்.

## सामगः ॥ ५७५ ॥

ஸாமத்தைக் கானம் செய்கிறவர்.

## साम ॥ ५७६ ॥

'वेदानां सामवेदोऽस्मि' என்று கீதையில் சொல்லியபடி வேதங்களின் மத்தியில் ஸாமவேதஸ்வரூபர்.

## निर्वाणम् ॥ ५७७ ॥

ஸமஸ்த துக்கங்களின் உபசமலக்ஷணமான பரமானந்தரூபமானவேதஸ்வரூபர்.

## भेषजम् ॥ ५७८ ॥

1. ஸம்ஸாரமாகிற ரோகத்திற்கு ஔஷதம்

போயிருக்கிறவர். 2. ஸகலருக்கும் பயத்தைக் கொடுக்கிறவர்.

## भिषक् ॥ ५७९ ॥

ஸம்ஸாரமான ரோகத்திலிருந்து மோக்ஷத்தை விரும்பும் முமுக்ஷுக்களுக்குப் பிர்ம்மவித்தையை உபதேசிக்கிறவர். 'भिषक्तमं त्वा भिषजां शृणोमि' என்று சுருதி.

## सन्यासकृत् ॥ ५८० ॥

மோக்ஷத்திற்காக நான்காவது ஆசிரமமான ஸன்னியாஸத்தை உண்டுபண்ணினவர்.

## शमः ॥ ५८१ ॥

1. ஸன்னியாஸிகளுக்குச் சமத்தையே முக்கியமான தர்மமாகச் சொன்னவர். 'यतीनां प्रशमो धर्मो नियमो वनवासिनाम् । दानमेव गृहस्थानां शुश्रूषा ब्रह्मचारिणाम् ॥' என்று ஸ்மிருதி. 2. ஸமஸ்த பூதங்களையும் சமனம் செய்கிறவர்.

## शान्तः ॥ ५८२ ॥

விஷயஸுகங்களில் அஸங்கராயிருக்கிறவர். 'निष्कलं निष्क्रियं शान्तम्' என்று சுருதி.

## निष्ठा ॥ ५८३ ॥

பிரளயகாலத்தில் ஸமஸ்தப் பிராணிகளுக்கும் ஸ்தானமாயிருக்கிறவர்.

## शान्तिः ॥ ५८४ ॥

ஸமஸ்தமான அக்ஞானங்களின் நிவிருத்தி, அதாவது, பிர்ம்மம் தான்.

## परायणम् ॥ ५८५ ॥

புனராவிருத்தியின் சங்கையே இல்லாத சிரேஷ்டமான ஸ்தானம்.

शुभाङ्गः शान्तिदः स्रष्टा कुमुदः कुवलेशयः ।
गोहितो गोपतिर्गोप्ता वृषभाक्षो वृषप्रियः ॥ ७६ ॥

## शुभाङ्गः ॥ ५८६ ॥

ஸுந்தரமான சரீரத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறவர்.

## शान्तिदः ॥ ५८७ ॥

ராகம், த்வேஷம் முதலானவைகளிலிருந்து மோக்ஷத்தைக் கொடுக்கிறவர்.

## स्रष्टा ॥ ५८८ ॥

ஸர்க்கத்தின் ஆதியில் ஸமஸ்த பூதங்களையும் ஸ்ருஷ்டிக்கிறவர்.

## कुमुदः ॥ ५८९ ॥

பூமியிடத்தில் ஸந்தோஷத்தையடைகிறவர்.

## कुवलेशयः ॥ ५९० ॥

1. பூமியைச் சூழ்ந்துகொண்டிருக்கிற ஜலத்தில் சயனம் செய்துகொண்டிருக்கிறவர். 2. பதரீபலத்தின் மத்தியில் சயனித்திருக்கிற தக்ஷகன். அதுவும் விஷ்ணுவின விபூதிதான. 3. ஆதிசேஷனுடைய உதரத்தில் சயனித்திருக்கிறவர்.

## गोहितः ॥ ५९१ ॥

1. பசுக்களின் அபிவிருத்தியின் பொருட்டுக் கோவர்த்தனபர்வதத்தைத் தூக்கினவர். 2. பூமியின் பாரத்தைத் தணிக்க ஸ்வேச்சையாய் சரீரத்தை எடுக்கிறவர்.

## गोपतिः ॥ ५९२ ॥

பூமியின்பதி.

## गोप्ता ॥ ५९३ ॥

1. ஜகத்ரக்ஷகர். 2. தன் மாயையால் தன் ஸ்வரூபத்தை மறைத்துக்கொள்ளுகிறவர்.

## वृषभाक्षः ॥ ५९४ ॥

1. ஸமஸ்த காமங்களையும் கொடுக்கக் கூடிய

கடாக்ஷங்களையுடையவர். 2. தர்மத்தையே நேத்திரங்களாயுடையவர்.

## वृषप्रियः ॥ ५९५ ॥

1. தர்மத்தையே பிரியமாயுடையவர். 2. தர்மமாயும் பிரியமாயுமிருக்கிறவர்.

अनिवर्ती निवृत्तात्मा संक्षेप्ता क्षेमकृच्छिवः ।
श्रीवत्सवक्षाः श्रीवासः श्रीपतिः श्रीमतां वरः ॥७७॥

## अनिवर्ती ॥ ५९६ ॥

1. தேவாஸுரயுத்தத்தில் பின்வாங்காதவர். 2. தர்மப் பிரியரானபடியால் தர்மத்திலிருந்து பின்வாங்காதவர்.

## निवृत्तात्मा ॥ ५९७ ॥

ஸ்வபாவமாகவே விஷயங்களிலிருந்து நிவிருத்தமான மனதையுடையவர்.

## संक्षेप्ता ॥ ५९८ ॥

விஸ்தாரமான ஜகத்தை ஸம்ஹாரகாலத்தில் ஸூக்ஷ்மமாய்ச் செய்கிறவர்.

## क्षेमकृत् ॥ ५९९ ॥

தம்மால் அங்கீகரிக்கப்பட்டவர்களுக்கு க்ஷேமத்தைச் செய்கிறவர்.

## शिवः ॥ ६०० ॥

தன் நாமாக்களால் ஸ்துதி செய்வதினாலேயே பரிசுத்தம் செய்கிறவர்.

## श्रीवत्सवक्षाः ॥ ६०१ ॥

ஸ்ரீவத்ஸம் என்ற அடையாளத்தை மார்பிலுடையவர்.

## श्रीवासः ॥ ६०२ ॥

எப்பொழுதும் அழிவில்லாமல் மார்பில் வஸிக்கும் லக்ஷ்மியையுடையவர்.

## श्रीपतिः ॥ ६०३ ॥

1. அமிருதமதனகாலத்தில் ஸுரர், அஸுரர் இவர்களை லக்ஷியம் செய்யாமல் லக்ஷ்மீதேவியால் பதியாக வரிக்கப்பட்டவர். 2. பராசக்திக்குப் பதி. 'पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते' என்று சுருதி.

## श्रीमतांवरः ॥ ६०४ ॥

ருக், யஜுஸ், ஸாமலக்ஷணமான ஸ்ரீயையுடைய பிர்ம்மா முதலானவர்களுக்கெல்லாம் பிரதானர். 'ऋचः सामानि यजूंषि सा हि श्रीरमृता सताम्' என்று சுருதி.

श्रीदः श्रीशः श्रीनिवासः श्रीनिधिः श्रीविभावनः ।
श्रीधरः श्रीकरः श्रेयः श्रीमाँल्लोकत्रयाश्रयः ॥ ७८ ॥

## श्रीदः ॥ ६०५ ॥

பக்தர்களுக்கு ஐசுவரியத்தைக் கொடுக்கிறவர்.

## श्रीशः ॥ ६०६ ॥

லக்ஷ்மீக்கு ஈசர்.

## श्रीनिवासः ॥ ६०७ ॥

ஸ்ரீமான்களிடத்தில் எப்பொழுதும் வஸிக்கிறவர்.

## श्रीनिधिः ॥ ६०८ ॥

ஐசுவரியங்களுக்கெல்லாம் நிதிபோல் இருப்பிடமான ஸர்வசக்திஸம்பன்னர்.

## श्रीविभावनः ॥ ६०९ ॥

தம் தம் கர்மாவுக்கு அனுகுணமாகப் பிராணிகளுக்கு ஐசுவரியத்தைக் கொடுக்கிறவர்.

## श्रीधरः ॥ ६१० ॥

ஸமஸ்தப் பிராணிகளுக்கும் தாயாயிருக்கிற லக்ஷ்மீயை மார்பில் தரித்துக் கொண்டிருக்கிறவர்.

## श्रीकरः ॥ ६११ ॥

தன்னை ஸ்மரிக்கிறவர்களுக்கும், ஸ்தோத்திரம் செய்கிறவர்களுக்கும், பூஜை செய்கிறவர்களுக்கும் ஐசுவரியத்தைக் கொடுக்கிறவர்.

## श्रेयः ॥ ६१२ ॥

அழிவில்லாத பரமானந்தலக்ஷணமான ஸுக ஸ்வரூபர்.

## श्रीमान् ॥ ६१३ ॥

ஸகல ஐசுவரியங்களும் பொருந்தினவர்.

## लोकत्रयाश्रयः ॥ ६१४ ॥

மூன்று லோகங்களுக்கும் ஆசிரயபூதர்.

स्वक्षः स्वङ्गः शतानन्दो नन्दिर्ज्योतिर्गणेश्वरः ।
विजितात्मा विधेयात्मा सत्कीर्तिश्छिन्नसंशयः ॥७९॥

## स्वक्षः ॥ ६१५ ॥

தாமரை மலருக்கொப்பான அழகான நேத்திரங்களையுடையவர்.

## स्वङ्गः ॥ ६१६ ॥

அழகான அவயவங்களையுடையவர்.

## शतानन्दः ॥ ६१७ ॥

பரமானந்தரூபரான ஒருவரே உபாதிபேதத்தால் அனேகவிதமாய் பேதத்தை யடைந்திருக்கிறவர். 'एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति' என்று சுருதி.

## नान्दिः ॥ ६१८ ॥

பரமானந்தவிக்கிரஹர்.

## ज्योतिर्गणेश्वरः ॥ ६१९ ॥

ஜோதிர்கணங்களுக்கெல்லாம் ஈசுவரர். 'तमेव भान्तमनुभाति सर्वम्' என்று சுருதி. 'यदादित्यगतं तेजः' என்று கீதை.

## विजितात्मा ॥ ६२० ॥

ஜயிக்கப்பட்ட மனதையுடையவர்.

## अविधेयात्मा ॥ ६२१ ॥

யாருக்கும் உட்படாத அதாவது ஒருவராலும் அறியமுடியாத ஸ்வரூபத்தையுடையவர்.

## सत्कीर्तिः ॥ ६२२ ॥

யதார்த்தமான கீர்த்தியையுடையவர்.

## छिन्नसंशयः ॥ ६२३ ॥

உள்ளங்கையிலிருக்கும் நெல்லிக் கனிபோல்

ஸகலத்தையும் ஸாக்ஷாத்காரம் செய்கிறவரான படியால் ஸம்சயரஹிதர்.

उदीर्णः सर्वतश्चक्षुरनीशः शाश्वतस्थिरः ।
भूशयो भूषणो भूतिर्विशोकः शोकनाशनः ॥८०॥

## उदीर्णः ॥ ६२४ ॥

ஸமஸ்தபூதங்களையும் அதிக்கிரமித்து இருக்கிறவர்.

## सर्वतश्चक्षुः ॥ ६२५ ॥

தன்னுடைய சைதன்யத்தால் எங்கும் எல்லாவற்றையும் பார்க்கிறவர். 'विश्वतश्चक्षुः' என்று சுருதி.

## अनीशः ॥ ६२६ ॥

தனக்கு மேல் ஈசன் இல்லாதவர். 'न तस्येशः कश्चन' என்று சுருதி.

## शाश्वतस्थिरः ॥ ६२७ ॥

அனேகதடவை பூமியில் அவதரித்தபோதிலும் அல்லது அடிக்கடி க்ஷேத்திரக்ஞரூபராய் உண்டானபோதிலும் ஸ்வயம் நிர்விகாரராய்ச் சாசுவதராயும் ஸ்திரராயுமிருக்கிறவர்.

## भूशयः ॥ ६२८ ॥

சீதாதேவியை லங்கையிலிருந்து கொண்டுவ ரும்பொருட்டு ஸமுத்திரபகவானை உத்தேசித்து பூமியில் சயனம் செய்தவர்.

## भूषणः ॥ ६२९ ॥

ஸ்வேச்சையாய் தன்னுடைய அநேக அவ தாரங்களால் பூமியை அலங்கரிக்கிறவர்.

## भूतिः ६३० ॥

1. எப்பொழுதும் ஸத்ரூபர். 2. ஸமஸ்த விபூதிகளுக்கும் காரணர்.

## विशोकः ॥ ६३१ ॥

பரமானந்தரூபரானபடியால் சோகமே இல் லாதவர்.

## शोकनाशनः ॥ ६३२ ॥

தன்னை நினைத்தமாத்திரத்தில் பக்தர்களுடை ய சோகங்களைப் போக்கடிக்கிறவர்.

अर्चिष्मानार्चितः कुम्भो विशुद्धात्मा विशोधनः ।
अनिरुद्धोऽप्रतिरथः प्रद्युम्नोऽमितविक्रमः ॥ ८१ ॥

## अर्चिष्मान् ॥ ६३३ ॥

தேஜஸ்ஸை உடைய ஸூர்யன், சந்திரன் இவர்களைத் தேஜோவான்களாகச் செய்யும் நித் யமான தேஜஸ்ஸையுடையவர்.

## अर्चितः ॥ ६३४ ॥

பிரம்மா முதலான ஸமஸ்தப் பிராணிகளா லும் பூஜிக்கப்படுகிறவர்.

## कुम्भः ॥ ६३५ ॥

கும்பம்போல் ஸமஸ்தப் பிராணிகளுக்கும் பிரதிஷ்டையாயிருக்கிறவர்.

## विशुद्धात्मा ॥ ६३६ ॥

ஸத்துவராஜஸ்தமோகுணரஹிதரானபடியால் பரிசுத்தஸ்வபாவர்.

## विशोधनः ॥ ६३७ ॥

பக்தர்களால் ஸ்மரிக்கப்பட்ட மாத்திரத்திலே யே பாபங்களைப் போக்கிச் சுத்தம் செய்கிறவர்.

## अनिरुद्धः ॥ ६३८ ॥

1. வாஸுதேவர், ஸங்கர்ஷணர், பிரத்யும் னர், அனிருத்தர் என்ற நான்கு வியூஹங்களில் அனிருத்தர். 2. எப்பொழுதும் சத்துருக்க ளால் யுத்தங்களில் தடுக்கப்படாதவர்.

## अप्रतिरथः ॥ ६३९ ॥

பிரதிபக்ஷனில்லாதவர்.

## प्रद्युम्नः ॥ ६४० ॥

பிரகிருஷ்டமான திரவிணத்தை யுடையவர்.

## अमितविक्रमः ॥ ६४१ ॥

அபரிமிதமான பராக்கிரமத்தையுடையவர்.

कालनेमिनिहा वीरः शौरिः शूरजनेश्वरः ।
त्रिलोकात्मा त्रिलोकेशः केशवः केशिहा हरिः ॥

## कालनेमिनिहा ॥ ६४२ ॥

காலநேமி என்ற அஸுரனை வதம் செய்தவர்.

## वीरः ॥ ६४३ ॥

விக்கிரமசாலி அதாவது கணங்களுடைய உதவியன்னியில் சத்துருசமூஹங்களை ஜயித்துத் திராரயிருக்கிறவர்.

## शौरिः ॥ ६४४ ॥

சூரகுலத்திலுண்டானவர்.

## शूरजनेश्वरः ॥ ६४५ ॥

வாஸவன் முதலான சூரர்களுக்கு ஈசர்.

## त्रिलोकात्मा ॥ ६४६ ॥

1. ஸர்வலோகாந்தர்யாமீ. 2. மூன்று லோ

களும் பரமாத்மாவைவிட பின்னமில்லாதபடியால் திரிலோகஸ்வரூபர்.

## त्रिलोकेशः ॥ ६४७ ॥

லோகங்களைத் தன்னுடைய ஆக்ஞையால் தம் தம் கார்யங்களில் ப்ரவிர்த்திக்கும்படி செய்கின்ற ஈசுவரர்.

## केशवः ॥ ६४८ ॥

1. தேஜஸ்ஸை உடைய ஸூர்யன் முதலானவர்களிடத்திலிருக்கிற கிரணங்களின் ஸ்வரூபர். 2. பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற சக்திகளையுடையவர். 3. பிரம்மா, சிவன் இவர்களைத் தன்னுடைய அம்சமாயுடையவர்.

## केशिहा ॥ ६४९ ॥

கேசி என்ற அஸுரனை வதம் செய்தவர்.

## हरिः ॥ ६५०

ஸம்ஸாரத்தை அடியுடன் நாசம் செய்கிறவர்.

कामदेवः कामपालः कामी कान्तः कृतागमः ।
अनिर्देश्यवपुर्विष्णुर्वीरोऽनन्तो धनंजयः ॥ ८३ ॥

## कामदेवः ॥ ६५१ ॥

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களை விரும்புகிறவர்களால் பிரார்த்திக்கப்படும் தேவர்.

## कामपालः ॥ ६५२ ॥

காமிகளுடைய காமங்களைப் பரிபாலிக்கிறவர்.

## कामी ॥ ६५३ ॥

1. பூர்ணகாமர். 2. பிரஜைகளை ஸ்ருஷ்டிக்கும் காமத்தையுடையவர். 'सोऽकामयत' என்று சுருதி.

## कान्तः ॥ ६५४ ॥

1. அபிரூபமான தேஹத்தையுடையவர். 2. த்விபரார்த்தத்தின் முடிவில் பிரம்மாவின் அந்தத்திற்குக் காரணபூதர்.

## कृतागमः ॥ ६५५ ॥

சுருதி, ஸ்மிருதி லக்ஷணமான ஆகமங்களைச் செய்தவர். 'वेदाः शास्त्राणि विज्ञानमेतत्सर्वं जनार्दनात् । श्रुतिस्मृती ममैवाज्ञे' என்று பகவத்வசனம்.

## अनिर्देश्यवपुः ॥ ६५६ ॥

குணாதீதரானபடியால் இப்படிப்பட்ட ரூபத்தையுடையவர் என்று அறியப்படாதவர்.

## विष्णुः ॥ ६५७ ॥

பூமி, ஆகாசம் இவைகளை வியாபித்துக்கொண்டிருக்கிற காந்தியையுடையவர். 'व्याप्य मे रोदसी पार्थ कान्तिरभ्यधिका स्थिता । क्रमणाद्वाप्यहं पार्थ विष्णुरित्यभिसंज्ञितः ॥' என்று மஹாபாரதம்.

## वीरः ॥ ६५८ ॥

எங்கும் செல்லுகிறவர். எங்குமுண்டாகிறவர். எங்கும் பிரகாசிக்கிறவர். எங்குமிருப்பவர்.

## अनन्तः ॥ ६५९ ॥

எங்கும் வியாபித்திருக்கிறபடியாலும், நித்தியரானபடியாலும், ஸர்வாத்மகரானபடியாலும் தேசகாலவஸ்துபரிச்சேதரஹிதரானபடியாலும் அனந்தராயிருக்கிறவர்.

## धनंजयः ॥ ६६० ॥

திக்விஜயத்தில் ஏராளமான திரவியத்தை அடைந்த அர்ஜுனன். 'पाण्डवानां धनंजयः' என்று கீதை.

ब्रह्मण्यो ब्रह्मकृद्ब्रह्मा ब्रह्म ब्रह्मविवर्धनः ।
ब्रह्मविद्ब्राह्मणो ब्रह्मी ब्रह्मज्ञो ब्राह्मणप्रियः ॥ ८४ ॥

## ब्रह्मण्यः ॥ ६६१ ॥

தபஸ், வேதங்கள், பிராம்மணர்கள், ஞானம் இவைகளுக்கு அனுகூலர்.

## ब्रह्मकृत् ॥ ६६२ ॥

தபஸ் முதலானவைகளைச் செய்கிறவர்.

## ब्रह्मा ॥ ६६३ ॥

பிரம்மரூபராய் ஸகலத்தையும் ஸ்ருஷ்டிக்கிறவர்.

## ब्रह्म ॥ ६६४ ॥

பிருஹத்தாயிருக்கிறபடியாலும், பெரியதாக ஆகிறபடியாலும் ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற லக்ஷணங்களையுடைய பிரம்மம். 'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म' என்று சுருதி. 'प्रत्यस्तमितभेदं यत्सत्तामात्रमगोचरम् । वचसामात्मसंवेद्यं तज्ज्ञानं ब्रह्मसंज्ञितम् ॥' என்று விஷ்ணுபுராணம்.

## ब्रह्मविवर्धनः ॥ ६६५ ॥

தபஸ் முதலானவைகளை விருத்தி செய்கிறவர்.

## ब्रह्मवित् ॥ ६६६ ॥

வேதவேதார்த்தங்களை யதார்த்தமாயறிந்தவர்.

## ब्राह्मणः ॥ ६६७ ॥

பிர்ம்மரூபராயும், பிராம்மணரூபராயுமிருந்து ஸகல லோகங்களுக்கும் வேதங்களின் பிரவசனத்தைச் செய்கிறவர்.

## ब्रह्मी ॥ ६६८ ॥

ஸகலமும் பிரம்மமானபடியால் ஸகலத்தையும் தமக்குட்பட்டதாகக் கொண்டிருக்கிறவர்.

## ब्रह्मज्ञः ॥ ६६९ ॥

ஸ்வாத்மபூதங்களான வேதங்களையறிந்தவர்.

## ब्राह्मणप्रियः ॥ ६७० ॥

1. பிராம்மணர்களுக்கு இஷ்டர். 2. பிராம்மணர்களை இஷ்டர்களாயுடையவர். 'घ्नन्तं शपन्तं परुषं वदन्तं यो ब्राह्मणं न प्रणमेद्यथार्हम् । स पापकृद्ब्रह्मदवाग्निदग्धो वध्यश्च दण्ड्यश्च न चास्मदीयः ॥' என்று பகவத் வசனம்.

महाक्रमो महाकर्मा महातेजा महोरगः ।
महाक्रतुर्महायज्वा महायज्ञो महाहविः ॥ ८५ ॥

## महाक्रमः ॥ ६७१ ॥

மஹத்தான பாதவிக்ஷேபங்களையுடையவர். 'शं नो विष्णुरुरुक्रमः' என்று ச்ருதி.

## महाकर्मा ॥ ६७२ ॥

ஜகத்தின் உத்பத்தி முதலான மகத்தான கர்மாக்களையுடையவர்.

## महातेजाः ॥ ६७३ ॥

ஸூர்யன் முதலான தேஜோவான்களுக்கு தேஜஸ்ஸைக் கொடுக்கும்படியான மஹத்தான தேஜஸ்ஸையுடையவர். 'येन सूर्यस्तपति तेजसेद्धः' என்று சுருதி. 'यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् । यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥' என்று கீதை.

## महोरगः ॥ ६७४ ॥

மஹத்தான ஸர்பமாயிருக்கிறவர். அதாவது வாஸுகியின் ஸ்வரூபர். 'सर्पाणामस्मि वासुकिः' என்று கீதை.

## महाक्रतुः ॥ ६७५ ॥

மஹத்தான யக்ஞஸ்வரூபர்.

## महायज्वा ॥ ६७६ ॥

லோக ஸங்கிரஹத்தை உத்தேசித்து மஹானான யஜ்வா அதாவது யாகம் செய்கிறவர்.

## महायज्ञः ॥ ६७७ ॥

மஹத்தான யக்ஞஸ்வரூபர். 'यज्ञानां जपयज्ञोऽस्मि' என்று கீதை.

## महाहविः ॥ ६७८ ॥

மஹத்தான ஹவிஸ். ஸமஸ்தமான ஜகத்தும் பிரம்மாத்மகமாய் பிரம்மத்தினிடத்தில் ஹோமம் செய்யப்படுகிறது.

स्तव्यः स्तवप्रियः स्तोत्रं स्तुतिः स्तोता रणप्रियः ।
पूर्णः पूरयिता पुण्यः पुण्यकीर्तिरनामयः ॥ ८३ ॥

## स्तव्यः ॥ ६७९ ॥

தனக்கு மேல் ஸ்துதி செய்யக்கூடியவர் இல்லாமல் ஸகலராலும் ஸ்துதி செய்யத்தகுந்தவர்.

## स्तवप्रियः ॥ ६८० ॥

மேற்சொன்ன காரணத்தினால் ஸ்தோத்திரப் பிரியர்.

## स्तोत्रम् ॥ ६८१ ॥

ஸகலமும் பிரம்மமானபடியால் தன்னுடைய குணஸங்கீர்த்தனரூபராயிருக்கிறவர்.

## स्तुतिः ॥ ६८२ ॥

ஸ்தோத்ரக்கிரியையும் தானாக இருக்கிறவர்.

## स्तोता ॥ ६८३ ॥

ஸ்தோத்திரம் செய்கிறவரும் அவர்தான்.

## रणप्रियः ॥ ६८४ ॥

லோகரக்ஷணார்த்தம் பஞ்சமஹாயுதங்களைத் தரித்துக்கொண்டு யுத்தத்தில் பிரியமுடையவரா யிருக்கிறவர்.

## पूर्णः ॥ ६८५ ॥

ஸமஸ்தகாமங்கள், சக்திகள் இவைகளால் பரிபூர்ணர்.

## पूरयिता ॥ ६८६ ॥

தான் காமங்கள், சக்திகள் இவைகளால் பரி பூர்ணராயிருப்பதுடன் பக்தர்களை ஸம்பத்து களால் பூர்ணம் செய்கிறவர்.

## पुण्यः ॥ ६८७ ॥

ஸ்தோத்திரம் செய்யப்பட்ட மாத்திரத்தி லேயே பக்தர்களுடைய கல்மஷங்களை நாசம் செய்கிறவர்.

## पुण्यकीर्तिः ॥ ६८८ ॥

மனிதர்களுக்கு பகவானுடைய கீர்த்தியானது புண்யத்தைக் கொடுக்கிறபடியால் புண்யமான கீர்த்தியையுடையவர்.

## अनामयः ॥ ६८९ ॥

கர்மாவினுலுண்டாகக்கூடிய பாஹ்யம், ஆந்தரம் முதலான வியாதிகளால் பீடிக்கப்படாதவர்.

मनोजवस्तीर्थकरो वसुरेता वसुप्रदः ।
वसुप्रदो वासुदेवो वसुर्वसुमना हविः ॥ ८७ ॥

## मनोजवः ॥ ६९० ॥

எங்கும் வியாபித்திருக்கிறபடியால் மனோவேகத்தைப்போலுள்ள வேகத்தையுடையவர்.

## तीर्थकरः ॥ ६९१ ॥

பதினுன்குவித்தைகள், பாஹ்யவித்தைகளின் ஸமயங்கள் இவைகளைச் செய்தவர். அல்லது உபதேசிக்கிறவர். பகவான் ஹயக்ரீவராக அவதரித்து மது கைடபர்களை வதம் செய்து ஸ்ருஷ்டியின் ஆதியில் பிரம்மாவுக்கு வேதங்களையும் மற்ற வித்தைகளையும் உபதேசித்து அஸுரர்களுக்கு வேதபாஹ்யங்களான மோஹவித்தைகளை உபதேசித்தார் என்று புராணங்களில் சொல்லப்படுகிறது.

## वसुरेताः ॥ ६९२ ॥

ஸ்வர்ணத்தை ரேதஸ்ஸாயுடையவர். 'अप एव

ससर्जादौ तासु वीर्यमथासृजत् । तदण्डमभवद्धैमं ब्रह्मणः कारणं परम् ॥' என்று வியாஸ வசனம்.

## वसुप्रदः ॥ ६९३ ॥

ஸாக்ஷாத்தாய்த்தனத்தியக்ஷராயிருந்து பக்தர்களுக்கு யதேஷ்டமாய் தனத்தைக்கொடுக்கிறவர்.

## वसुप्रदः ॥ ६९४ ॥

1. பக்தர்களுக்கு மோக்ஷ ரூபமான பிரகிருஷ்டமான பலனைக் கொடுக்கிறவர். 2. அஸுரர்களுடைய தனத்தை நிர்மூலமாய் நாசம் செய்கிறவர்.

## वासुदेवः ॥ ६९५ ॥

வஸுதேவருடைய குமாரராய் அவதரித்தவர்.

## वसुः ॥ ६९६ ॥

1. ஸமஸ்த பூதங்களுக்கும் வாஸஸ்தானமாயிருக்கிறவர். 2. ஸமஸ்த பூதங்களிலும் வஸிக்கிறவர்.

## वसुमनाः ॥ ६९७ ॥

நிர்விசேஷமாய் ஸகல விஷயங்களிலுமிருக்கும் மனதை யுடையவர்.

## हविः ॥ ६९८ ॥

ஹவிஸ்வரூபர். 'ब्रह्मार्पणं ब्रह्महविः' என்று கீதை.

सद्गतिः सत्कृतिः सत्ता सद्भूतिः सत्परायणः ।
शूरसेनो यदुश्रेष्ठः सन्निवासः सुयामुनः ॥ ८८ ॥

## सद्गतिः ॥ ६९९ ॥

1. பிரம்மம் ஒன்று இருக்கிறது என்று அறிகிற ஸாதுக்களால் அடையக்கூடியவர்.

2. உத்கிருஷ்டமான புத்தியை யுடையவர்.

## सत्कृतिः ॥ ७०० ॥

ஜகத்தின் உத்பத்தி முதலான ஸத்கிரியை களை யுடையவர்.

## सत्ता ॥ ७०१ ॥

ஸஜாதீய பேதம், விஜாதீயபேதம், ஸ்வகத பேதம் இவைகளில்லாமல், அத்விதீயராயிருக்கிறவர். 'एकमेवाद्वितीयम्' என்று சுருதி.

## सद्भूतिः ॥ ७०२ ॥

அனேக விதமாய்ப்புலப்படுகிற சிதாத்மகமாயும் போதஸ்வரூபமாயுமிருக்கிற பரமாத்மா.

## सत्परायणः ॥ ७०३ ॥

தத்துவ ஞானிகளுக்குப்பிரகிருஷ்டமான கதி

## शूरसेनः ॥ ७०४ ॥

ஹனுமான் முதலான சௌர்யசாலிகளை ஸேனையிலுடையவர்.

## यदुश्रेष्ठः ॥ ७०५ ॥

யதுக்களில் பிரதானர்.

## सन्निवासः ॥ ७०६ ॥

பக்தர்களான ஸாதுக்களுக்கு ஆசிரயர்.

## सुयामुनः ॥ ७०७ ॥

1. யமுனை தீரத்தில் வஸிக்கின்ற தேவகீ, வஸுதேவர், நந்த கோபர், யசோதை, பலபத்திரர், ஸுபத்ரை முதலானவர்களால் சூழப்பட்டவர். 2. யமுனைதீரத்தில் அழகான கோப வேஷத்தை தரித்துக் கொண்டிருக்கிற பிரம்மா முதலானவர்களால் சூழப்பட்டவர்.

भूतावासो वासुदेवः सर्वासुनिलयोऽनलः ।
दर्पहा दर्पदो दृप्तो दुर्धरोऽथापराजितः ॥ ८९ ॥

## भूतावासः ॥ ७०८ ॥

ஸமஸ்தப்பிராணிகளுக்கும் முக்கியமான வா

ஸஸ்தானமாயிருக்கிறவர். 'वसन्ति त्वयि भूतानि भूतावासस्ततो भवान्' என்று ஹரிவம்சம்.

## वासुदेवः ॥ ७०९ ॥

தன் மாயையால் ஜகத் முழுமையும் மறைத்துக்கொள்ளுகிறவர். 'छादयामि जगत्सर्वं भूत्वा सूर्य इवांशुभिः ।' என்று பகவத் வசனம்.

## सर्वासुनिलयः ॥ ७१० ॥

ஸமஸ்தமானப்பிராணன்களுக்கும் லயஸ்தானமாயிருக்கும் ஜீவாத்மா.

## अनलः ॥ ७११ ॥

இவ்வளவுதான் என்று சொல்லிமுடியாத சக்தி ஸம்பத் இவைகளையுடையவர்.

## दर्पहा ॥ ७१२ ॥

தர்மவிருத்தமான மார்க்கத்திலிருக்கின்ற துஷ்டர்களுடைய கர்வத்தை அடக்கிறவர்.

## दर्पदः ॥ ७१३ ॥

தர்மமார்க்கத்திலிருக்கிறவர்களுக்குக் கர்வத்தைக்கொடுக்கிறவர்.

## दृप्तः ॥ ७१४ ॥

ஸ்வாத்மாம்ருதரஸாஸ்வாதத்தினல் த்ருப்தி
திருப்தர்.

## दुर्धरः ॥ ७१५ ॥

ஸமஸ்தமான உபாதிகளிலிருந்து விடுபட்ட
வரானபடியால் ப்ரணிதானம் முதலானவைக
ளில் அடங்காதவர். அப்படியிருந்தும் அனேக
ஜன்மாக்களில் அனுஷ்டிக்கப்பட்ட ஸமாதி
யோகத்தால் சிலபேர்களால் மட்டும் இருதயத்
தில் தரிக்கப்பட்டவர். 'क्लेशोऽधिकरस्तेषामव्यक्तासक्त-
चेतसाम् । अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥' என்று
கீதை.

## अपराजितः ॥ ७१६ ॥

ராகம், த்வேஷம் முதலான ஆந்தரமான சத்
துருக்களாலும், அஸுரர்கள் முதலான பாஹ்
யசத்துருக்களாலும் ஜயிக்கப்படாதவர்.

विश्वमूर्तिर्महामूर्तिर्दीप्तमूर्तिरमूर्तिमान् ।
अनेकमूर्तिरव्यक्तः शतमूर्तिः शताननः ॥ ९० ॥

## विश्वमूर्तिः ॥ ७१७ ॥

ஸர்வாத்மகரானபடியால் விசுவத்தை மூர்த்தி
யாயுடையவர்.

## महामूर्तिः ॥ ७१८ ॥

சேஷபர்யங்கத்தில் சயனித்துக்கொண்டு மஹாத்தான மூர்த்தியையுடையவர்.

## दीप्तमूर्तिः ॥ ७१९ ॥

ஞானமயமான மூர்த்தியையுடையவர்.

## अमूर्तिमान् ॥ ७२० ॥

கர்மநிபந்தனமான மூர்த்தியே இல்லாதவர்.

## अनेकमूर्तिः ॥ ७२१ ॥

லோகானுக்கிரஹார்த்தம் ஸ்வேச்சையால் அவதாரங்களில் அனேக மூர்த்திகளை யுடையவர்.

## अव्यक्तः ॥ ७२२ ॥

மேலே சொன்னபடி அனேகமூர்த்திகளையுடையவராயிருந்தும் இவர் இப்படிப்பட்டவர் என்று அறியமுடியாதவர்.

## शतमूर्तिः ॥ ७२३ ॥

அனேகவிகல்பங்களால் அனேகமூர்த்தியாகக் காணப்படுகிறவர்.

## शताननः ॥ ७२४ ॥

விசுவமூர்த்தியாயும், அனேகமூர்த்தியாயுமிருக்கிறபடியால் அனேகமுகங்களையுடையவர்.

एको नैकः सवः कः किं यत्तत्पदमनुत्तमम् ।
लोकबन्धुर्लोकनाथो माधवो भक्तवत्सलः ॥ ९१ ॥

## एकः ॥ ७२५ ॥

உண்மையில் ஸஜாதீய விஜாதீயஸ்வகதபேத ரஹிதராய் அத்விதீயராயிருக்கிறவர். 'एक-मेवाद्वितीयम्' என்று ச்ருதி.

## नैकः ॥ ७२६ ॥

மாயையால் அநேகரூபியாயிருக்கிறவர். 'इन्द्रो मायाभिः पुरुरूप ईयते' என்று ச்ருதி.

## सवः ॥ ७२७ ॥

ஸோமபானம் செய்யப்படும் யாகஸ்வரூபர்.

## कः ॥ ७२८ ॥

ஸுகவாசகமான 'क' என்ற சப்தத்தால் ஸ்துதி செய்யப்படும் பரமாத்மா. 'कं ब्रह्म' என்று ச்ருதி.

## किम् ॥ ७२९ ॥

ஸமஸ்த புருஷார்த்தரூபமாயிருக்கிறபடியால் விசாரம் செய்யவேண்டிய பிரம்மம்.

## यत् ॥ ७३० ॥

ஸ்வதஸ்ஸித்தமான பிரம்மம். 'यतो वा इमानि भूतानि जायन्ते' என்று சுருதி.

## तत् ॥ ७३१ ॥

எல்லாவற்றையும ஸ்ருஷ்டிக்கிற பிர்ம்மம். 'ओं तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः।' என்று கீதை.

## पदमनुत्तमम् ॥ ७३२ ॥

முமுக்ஷுக்களால் அடையப்பட்ட ஸர்வோத்கிருஷ்டமான ஸ்தானம்.

## लोकबन्धुः ॥ ७३३ ॥

1. ஸகல லோகங்களுக்கும் ஆதாரபூதரான பரமாத்மாவிடத்தில் பிராணிகள் பந்தனம் செய்யப்படுகிறபடியால் லோகபந்து என்று சொல்லப்பட்டது. 2. லோகங்களுக்கெல்லாம் ஜனகரானபடியால் பிதாவுக்குச் சமமான பந்துவாயிருக்கிறவர். 3. லோகங்களுக்குச் சுருதி ஸ்மிருதி லக்ஷணமான உபதேசத்தை பந்துபோல் செய்தவர்.

## लोकनाथः ॥ ७३४ ॥

1. லோகங்களால் யாசிக்கப்படுகிறவர். 2. லோகங்களுக்கு ஈசர். 3. லோகங்களை ஆசீர்வதித்து அவைகளுக்கு அபீஷ்டங்களைக் கொடுக்கிறவர்.

## माधवः ॥ ७३५ ॥

மதுகுலத்திலுண்டானவர்.

## भक्तवत्सलः ॥ ७३६ ॥

பக்தர்களிடத்தில வாத்ஸல்யமுடையவர்.

सुवर्णवर्णो हेमाङ्गो वराङ्गश्चन्दनाङ्गदी ।
वीरहा विषमः शून्यो घृताशीरचलश्चलः ॥ ९२ ॥

## सुवर्णवर्णः ॥ ७३७ ॥

ஸுவர்ணத்தின் வர்ணம்போலுள்ள வர்ணத்தையுடையவர். 'यदा पश्यः पश्यते रुक्मवर्णम्' என்று சுருதி.

## हेमाङ्गः ॥ ७३८ ॥

தங்கம்போலுள்ள சரீரத்தையுடையவர். 'य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषः' என்று சுருதி.

## वराङ्गः ॥ ७३९ ॥

சோபனமான அவயவங்களையுடையவர்.

## चन्दनाङ्गदी ॥ ७४० ॥

சந்தனம் கேயூரம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டவர்.

## वीरहा ॥ ७४१ ॥

தர்மத்தை ரக்ஷிக்கும்பொருட்டுத் தர்மவிரோதிகளான ஹிரண்யகசிபு முதலான அஸுர வீரர்களை நாசம் செய்தவர்.

## विषमः ॥ ७४२ ॥

ஸர்வவிலக்ஷணரானபடியால தனக்கு ஸமமானவரே இல்லாதவர். 'न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यः' என்று கீதை.

## शून्यः ॥ ७४३ ॥

ஸர்வவிசேஷரஹிதரானபடியால் சூன்யம்போலிருக்கிறவர்.

## घृताशीः ॥ ७४४ ॥

பிரார்த்தனையே இல்லாதவர்.

## अचलः ॥ ७४५ ॥

ஸ்வரூபம், ஸாமர்த்தியம, ஞானம் இவைகளிலிருந்து கொஞ்சமும் சலனமில்லாதவர்.

## चलः ॥ ७४६ ॥

வாயுரூபமாய்ச் சலிக்கிறவர்.

अमानी मानदो मान्यो लोकस्वामी त्रिलोकधृक् ।
सुमेधा मेधजो धन्यः सत्यमेधा धराधरः ॥ ९१ ॥

## अमानी ॥ ७४७ ॥

தன்னைத் தானே அறிகிறவரானபடியால் அனாத்மகமானவைகளில் ஆத்மாபிமானமில்லாதவர்.

## मानदः ॥ ७४८ ॥

1. தன் மாயையால் ஸமஸ்தப் பிராணிகளுக்கும் அனாத்மாக்களில் ஆத்மாபிமானத்தைக் கொடுக்கிறவர். 2. பக்தர்களுக்கு ஸத்காரத்தையும் பஹுமானத்தையும் கொடுக்கிறவர். 3. அதர்மிஷ்டர்களுக்கு ஸதகாரத்தைக் கண்டிக்கிறவர். 4. தத்துவக்ஞானிகளுக்கு அனாத்மாவில் ஆத்மாபிமானத்தைக் கண்டிக்கிறவர்.

## मान्यः ॥ ७४९ ॥

ஸர்வேச்வரரானபடியால் ஸமஸ்தர்களாலும் பூஜிக்கத்தகுந்தவர்.

## लोकस्वामी ॥ ७५० ॥

பதினான்கு லோகங்களுக்கும் ஈசர்.

## त्रिलोकधृक् ॥ ७५१ ॥

மூன்று லோகங்களையும் தரிக்கிறவர்.

## सुमेधाः ७५२ ॥

சோபனமான பிரக்ஞையையுடையவர்.

**मेधजः ॥ ७५३ ॥**

யாகத்திலுண்டாகிறவர்.

**धन्यः ॥ ७५४ ॥**

கிருதார்த்தர்.

**सत्यमेधाः ॥ ७५५ ॥**

உண்மையான பிரக்ஞையையுடையவர்.

**धराधरः ॥ ७५६ ॥**

சேஷர் முதலான அசேஷமான தன்னுடைய அம்சங்களால் பூமியைத் தரித்துக்கொண்டிருக்கிறவர்.

तेजोवृषो द्युतिधरः सर्वशस्त्रभृतां वरः ।
प्रग्रहो निग्रहो व्यग्रो नैकश्रृङ्गो गदाग्रजः ॥ ९४ ॥

**तेजोवृषः ॥ ७५७ ॥**

ஆதித்யரூபராய் மழையை வர்ஷிக்கிறவர்.

**द्युतिधरः ॥ ७५८ ॥**

சிரேஷ்டமான காந்தியை அவயவங்களிலுடையவர்.

**सर्वशस्त्रभृतांवरः ॥ ७५९ ॥**

சஸ்திரங்களைத் தரித்துக்கொண்டிருக்கிறவர்களுக்கெல்லாம் சிரேஷ்டர்.

## प्रग्रहः ॥ ७६० ॥

1. பக்தர்களால் உபஹரிக்கப்பட்ட பத்திரம், புஷ்பம், தோயம் முதலியவைகளைக் கிரஹித்துக் கொள்ளுகிறவர். 2. அங்குமிங்கும் திரிகின்ற அடக்கமுடியாத இந்திரியங்களான குதிரைகளைத் தன் பிரஸாதமான ரச்மிகளால் அடக்குகிறவர்.

## निग्रहः ॥ ७६१ ॥

ஸகலத்தையும் தன் வசத்தில் அடக்குகிறவர்.

## व्यग्रः ॥ ७६२ ॥

1. நாசரஹிதர். 2. பக்தர்களுக்கு அபீஷ்டத்தைக் கொடுப்பதிலேயே ஜாகரூகராயிருக்கிறவர்.

## नैकशृङ्गः ॥ ७६३ ॥

அனேக சிருங்கங்களையுடையவர் அதாவது தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு கொம்புகளையுடையவர். 'चत्वारि शृङ्गाः त्रयोऽस्य पादाः' என்று சுருதி.

## गदाग्रजः ॥ ७६४ ॥

1. மந்திரங்களால் எதிரில் ஆவிர்ப்பவிப்பவர். 'गद' என்று நாமதேயமுள்ள வாஸுதேவருடைய தம்பி. அவருக்கு முன் உண்டானவர்.

चतुर्मूर्तिश्चतुर्बाहुश्चतुर्व्यूहश्चतुर्गतिः ।
चतुरात्मा चतुर्भावश्चतुर्वेदविदेकपात् ॥ ९५ ॥

## चतुर्मूर्तिः ॥ ७६५ ॥

1. விராட்ரூபம், ஸூத்திராத்மா, பிராகிருதம், துரீயம் என்ற நான்கு மூர்த்திகளையுடையவர். 2. வெண்மை, சிவப்பு, பசுமை, கருப்பு நிறமுள்ள மூர்த்தியையுடையவர்.

## चतुर्बाहुः ॥ ७६६ ॥

நான்கு புஜங்களையுடையவர்.

## चतुर्व्यूहः ॥ ७६७ ॥

சரீரபுருஷர், சந்தப்புருஷர் (छन्दः पुरुषः), வேதபுருஷர், மஹாபுருஷர் என்று உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட நான்கு வியூஹங்களையுடையவர்.

## चतुर्गतिः ॥ ७६८ ॥

சாஸ்திரவிதியை அதிக்கிரமணம் செய்யாமலிருக்கிற நான்கு வர்ணத்தார்கள், நான்கு ஆச்

ரமிகள் இவர்களுக்குச் சாக்ஷியாயிருக்கிற வர்.

## चतुरात्मा ॥ ७६९ ॥

1. ராகம், த்வேஷம் முதலியவைகளில்லாத சதுரமான மனதையுடையவர். 2. மனஸ், புத்தி, அஹங்காரம், சித்தம் என்ற புருஷார்த்த சதுஷ்டயாத்மகர்.

## चतुर्भावः ॥ ७७० ॥

தர்மம், அர்த்தம், காமம, மோக்ஷம் என்ற புருஷார்த்தங்களுக்கு உத்பத்திஸ்தானமாயிருக் கிறவர்.

## चतुर्वेदवित् ॥ ७७१ ॥

நான்கு வேதங்களையும் யதார்த்தமாய் அறி கிறவர்.

## एकपात् ॥ ७७२ ॥

ஒரு பாதத்தையுடையவர். 'पादोऽस्य विश्वा भूतानि' என்று சுருதி. 'विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ।' என்று கீதை.

समावर्तोऽनिवृत्तात्मा दुर्जयो दुरतिक्रमः ।
दुर्लभो दुर्गमो दुर्गो दुरावासो दुरारिहा ॥ ९६ ॥

## समावर्तः ॥ ७७३ ॥

ஸம்ஸாரசக்கரத்தைச் செவ்வையாய் சுழற்று கிறவர்.

## अनिवृत्तात्मा ॥ ७७४ ॥

எங்கும் பரிபூர்ணரானபடியால் எங்கும் நிவிருத்தமில்லாத ஆத்மாவையுடையவர். निवृत्तात्मा என்னும் பதம். அப்பொழுது விஷயங்களினின்று நிவிருத்தமான மனதையுடையவர் என்று அர்த்தம்.

## दुर्जयः ॥ ७७५ ॥

ஜயிக்கமுடியாதவர்.

## दुरतिक्रमः ॥ ७७६ ॥

பயஹேதுவானபடியால் ஸூர்யன் முதலானவர்கள் இவருடைய ஆக்ஞையை அதிக்கிரமிக்கிறதில்லை. அதாவது அதிக்கிரமிக்க முடியாதவர். 'भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः । भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः ॥' என்று மந்திரவர்ணம்.

## दुर्लभः ॥ ७७७ ॥

துர்லபமான பக்தியால் அடையப்பட்டவர். 'जन्मान्तरसहस्रेषु तपोज्ञानसमाधिभिः । नराणां क्षीणपापानां कृष्णे भक्तिः प्रजायते ॥' என்று வியாஸவசனம். 'भक्त्या लभ्यस्त्वनन्यया' என்று கீதை.

## दुर्गमः ॥ ७७८ ॥

ஸாமானியமாய் அறியமுடியாதவர்.

## दुर्गः ॥ ७७९ ॥

அனேக இடையூறுகளால் மிகவும் சிரமப்பட்டு அடையக்கூடியவர்.

## दुरावासः ॥ ७८० ॥

யோகிகளால் ஸமாதிகாலத்தில் சித்தத்தில் மிகவும் சிரமப்பட்டு நிறுத்தப்படுகிறவர்.

## दुरारिहा ॥ ७८१ ॥

துர்மார்க்கத்தில் செல்லுகின்ற தானவர்களை வதம் செய்தவர்.

शुभाङ्गो लोकसारङ्गः सुतन्तुस्तन्तुवर्धनः ।
इन्द्रकर्मा महाकर्मा कृतकर्मा कृतागमः ॥ ९७ ॥

## शुभाङ्गः ॥ ७८२ ॥

சோபனமான அங்கங்களுடன் தியானம் செய்யப்பட்டவர்.

## लोकसारङ्गः ॥ ७८३ ॥

1. லோகங்களின் ஸாரத்தைக்கிரஹிக்கின்றவர். 2. லோக ஸாரமான பிரணவத்தால் அடையக்கூடியவர்.

## सुतन्तुः ॥ ७८४ ॥

பிரபஞ்ச ரூபமாய் விஸ்தீர்ணத்தையடைந்த சோபனமான தந்துவை யுடையவர்.

## तन्तुवर्धनः ॥ ७८५ ॥

அந்தத் தந்துவை விருத்தி செய்கிறவர். அல்லது சேதிக்கிறவர்.

## इन्द्रकर्मा

தேவேந்திரனுடைய கர்மாவைப் போலுள்ள கர்மாவையுடையவர்.

## महाकर्मा ॥ ७८६ ॥

ஆகாசம் முதலான மஹா பூதங்களைக் காரியங்களாயுடையவர்.

## कृतकर्मा ॥ ७८७ ॥

1. அனுஷ்டிக்கப்பட்ட ஸகல கர்மாக்களை யுடையவர். அனுஷ்டிக்க வேண்டியதே இல்லாத கிருதார்த்தர். 2. தர்மரூபமான கர்மாவைச்செய்தவர்.

## कृतागमः ॥ ७८८ ॥

வேதாத்மகமான ஆகமங்களைச் செய்தவர். 'अस्य महतो भूतस्य निश्वसितमेतत्' என்று சுருதி.

उद्भवः सुन्दरः सुन्दो रत्ननाभः सुलोचनः ।
अर्को वाजसनः शृङ्गी जयन्तः सर्वविज्जयी ॥ ९८ ॥

## उद्भवः ॥ ७९० ॥

ஸ்வேச்சையால் உத்கிருஷ்டமான ஜன்மாவை யடைகிறவர். 2. ஸர்வகாரணமானபடியால் ஜன்மாவே இல்லாதவர்.

## सुन्दरः ॥ ७९१ ॥

விசுவத்தை அதிசயித்திருக்கிற ஸௌபாக்கியசாலியாயிருக்கிறவர்.

## सुन्दः ७९२ ॥

கருணாகரர்.

## रत्ननाभः ॥ ७९३ ॥

ரத்னம்போல் ஸுந்தரமான நாபியையுடையவர்.

## सुलोचनः ॥ ७९४ ॥

சோபனமான நேத்திரம் அல்லது ஞானத்தையுடையவர்.

## अर्कः ॥ ७९५ ॥

பூஜ்யதமர்களான பிரம்மாதிகளாலும் பூஜிக்கப்பட்டவர்.

## वाजसनः ॥ ७९६ ॥

யாசகர்களுக்கு அன்னத்தைக் கொடுக்கிறவர்.

## शृङ्गी ॥ ७९७ ॥

பிரளயத்தில் கொம்புபோலுள்ள மத்ஸ்யவிசேஷத்தின் ரூபத்தையுடையவர்.

## जयन्तः ॥ ७९८ ॥

சத்துருக்களை அதிசயமாய் ஜயிக்கிறவர்.

## सर्वविज्जयी ॥ ७९९ ॥

ஸகல விஷயங்களின் ஞானத்தையுடையவராயும், பாஹ்யம், ஆந்தரம் இந்தச் சத்துருக்களை ஜயிக்கும் சீலமுடையவர்.

सुवर्णबिन्दुरक्षोभ्यः सर्ववागीश्वरेश्वरः ।
महाह्रदो महागर्तो महाभूतो महानिधिः ॥ ९९ ॥

## सुवर्णबिन्दुः ॥ ८०० ॥

ஸுவர்ணம்போலுள்ள அவயவங்களையுடையவர். 2. சோபனமான அக்ஷரம், பிந்து இவைகளையுடையவர் அதாவது மந்திராத்மா.

## अक्षोभ्यः ॥ ८०१ ॥

ராகம், துவேஷம், சப்தம் முதலான விஷயங்

கள் தேவர்கள், இவர்களால் க்ஷோபிக்கமுடியாதவர்.

## सर्ववागीश्वरेश्वरः ॥ ८०२ ॥

வாகீசர்களான பிரம்மா முதலானவர்களுக்கெல்லாம் ஈசர்.

## महाह्रदः ॥ ८०३ ॥

யோகிகளால் ஸதாநந்தத்தில் மூழ்கிச் சிரமபரிஹாரம் செய்துகொண்டு ஸுகமாயிருக்கக்கூடிய அகழ் போலிருக்கிறவர்.

## महागर्तः ॥ ८०४ ॥

அகழ்போல் தாண்டமுடியாத மாயையையுடையவர். ‘मम माया दुरत्यया’ என்று கீதை.
2. மஹாரதர் அல்லது சிறந்த தேரானி.

## महाभूतः ॥ ८०५ ॥

மூன்று காலங்களிலும் அவச்சேதரஹிதராயிருக்கிறவர்.

## महानिधिः ॥ ८०६ ॥

ஸமஸ்த பூதங்களுக்கும் பெரிய நிதிபோலிருக்கிறவர்.

कुमुदः कुन्दरः कुन्दः पर्जन्यः पावनोऽनिलः ।
अमृताशोऽमृतवपुः सर्वज्ञः सर्वतोमुखः ॥ १०० ॥

## कुमुदः ॥ ८०७ ॥

பாராவதரணத்தால் பூமியை ஸந்தோஷம் செய்கிறவர்.

## कुन्दरः ॥ ८०८ ॥

1. குந்தபுஷ்பத்தைப் போல் சுத்தமான தர்மங்களாலுண்டாகும் பலன்களைக் கொடுக்கிறவர். 2 குந்தபுஷ்பத்திற்குச் சமமான சுத்தமான தர்மபலன்களைக் கிரஹித்துக்கொள்ளுகிறவர். 3. ஹிரண்யாக்ஷனை வதம் செய்யும்பொருட்டு வராஹரூபத்தைத் தரித்துக்கொண்டு பூமியைப் பிளந்தவர்.

## कुन्दः ॥ ८०९ ॥

குந்த புஷ்பம் போலும், சுத்தஸ்படிகம்போலும் ஸுந்தரமான அவயவங்களையுடையவர். 2. பூமியை கசியபரின்பொருட்டுக் கொடுத்தவர். 'सर्वपापविशुद्ध्यर्थं वाजिमेधेन चेष्टवान् । तस्मिन्यज्ञे महादाने दक्षिणां भृगुनन्दनः ॥ मारीचाय ददौ प्रीतः कश्यपाय वसुन्धराम् ।' என்று ஹரிவம்சம். 3. பூமியைக் கண்டனம் செய்கிறவர். அதாவது பூமிபதிகளான க்ஷத்திரியர்களை வதம் செய்தவர்.

## पर्जन्यः ॥ ८१० ॥

மழைபோல் ஆத்யாத்மிகம் முதலான தாபங்

களைச் சமனம் செய்கிறவர். 2. பக்தர்களுக்கு ஸமஸ்த காமங்களையும் வர்ஷிக்கிறவர்.

## पावनः ॥ ८११ ॥

ஸ்மரித்த மாத்திரத்திலேயே பரிசுத்தம் செய்கிறவர்.

## अनिलः ॥ ८१२ ॥

தன்னைப் பிரேரணம் செய்வோர் இல்லாதவர். 2. நித்யக்ஞானஸ்வரூபர். 3. அறியமுடியாதவர்.

## अमृताशः ॥ ८१३ ॥

1. ஸ்வாத்மானந்தத்தை அனுபவிக்கிறவர். 2. க்ஷீரஸாகரத்திலிருந்து கடைந்து எடுக்கப்பட்ட அமிர்தத்தைத் தேவதைகளுக்குக் கொடுத்துத் தானும் பானம்செய்தவர். 3. பலனழியாத ஆசையையுடையவர்.

## अमृतवपुः ॥ ८१४ ॥

மரணமில்லாத சரீரத்தையுடையவர்.

## सर्वज्ञः ॥ ८१५ ॥

ஸகலத்தையும் அறிந்தவர்.

## सर्वतोमुखः ॥ ८१६ ॥

எங்கும் முகங்களையுடையவர். 'सर्वतोऽक्षिशिरोमुखम्' என்றுகீதை.

सुलभः सुव्रतः सिद्धः शत्रुजिच्छत्रुतापनः ।
न्यग्रोधोदुम्बरोऽश्वत्थश्चाणूरान्ध्रनिषूदनः ॥ १०१ ॥

## सुलभः ॥ ८१७ ॥

பக்தியுடன் அர்ப்பணம் செய்யப்பட்ட பத்திரம், புஷ்பம், பலம், தோயம் முதலானவைகளால் ஆநாயாஸமாக அடையக்கூடியவர். 'पत्रेषु पुष्पेषु फलेषु तोयेष्वक्रीतलभ्येषु सदैव सत्सु । भक्त्येकलभ्ये पुरुषे पुराणे मुक्त्यै कथं न क्रियते प्रयत्नः ॥' என்று மஹாபாரதம்.

## सुव्रतः ॥ ८१८ ॥

சோபனமான விரதத்தை நியதராய் புஜிக்கிறவர். 2. போஜனமே இல்லாதவர்.

## सिद्धः ॥ ८१९ ॥

ஸ்வயம் பிரஸித்தராயிருக்கிறவர்.

## शत्रुजित् ॥ ८२० ॥

ஸுரசத்ருக்களை ஜயிக்கிறவர்.

## शत्रुतापनः ॥ ८२१ ॥

ஸுரசத்ருக்களைத் தபிக்கும்படி செய்கிறவர்.

## न्यग्रोधः ॥ ८२२ ॥

1. மேலே வேரும் கீழே கிளையுமாய் வளருகிறவர். அதாவது ஸகலத்திற்கும் மேலிருக்கிறவர். 2. ஸமஸ்தப் பிராணிகளையும் அலக்ஷியம் செய்து தன் மாயையால் நிரோதம் செய்கிறவர்.

## उदुम्बरः ॥ ८२३ ॥

1. ஆகாசத்திற்கு மேல்பட்டவர். ஆகாசத்திற்குக் காரணர். 2. அன்னம் முதலான ஸ்வரூபமாய்ப் பிராணிகளைப் போஷிக்கிறவர். 'ऊर्ग्वा अन्नाद्यमुदुम्बरम्' என்று ச்ருதி.

## अश्वत्थः ॥ ८२४ ॥

நாளையதினமிருக்குமென்று நிச்சயமில்லாத ஸம்ஸார விருக்ஷம். 'ऊर्ध्वमूलोऽवाक्शाख एषोऽश्वत्थः सनातनः' என்று ச்ருதி. 'ऊर्ध्वमूलमधःशाखमश्वत्थं प्राहुरव्ययम्' என்று ஸ்மிருதி.

## चाणूरान्ध्रनिषूदनः ॥ ८२५ ॥

சாணூரன் என்ற அஸுரனை வதம் செய்தவர்.

सहस्रार्चिः सप्तजिह्वः सप्तैधाः सप्तवाहनः ।
अमूर्तिरनघोऽचिन्त्यो भयकृद्भयनाशनः ॥ १०२ ॥

## सहस्रार्चिः ॥ ८२६ ॥

அனந்தமான தேஜஸ்ஸையுடையவர். 'दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता। यदि भाः सदृशी सा स्यात् भासस्तस्य महात्मनः ॥' என்று கீதை.

## सप्तजिह्वः ॥ ८२७ ॥

ஏழு நாக்குகளையுடைய அக்னிரூபராயிருக்கிறவர். 'काली कराली मनोजवा च सुलोहिता या च सुधूम्रवर्णा। स्फुलिङ्गिनी विश्वरुचिश्च देवी लोलायमाना इति सप्तजिह्वाः ॥' என்று சுருதி.

## सप्तैधाः ॥ ८२८ ॥

ஏழு தீப்திகளையுடைய அக்னி. 'सप्त ते अग्ने समिधः सप्तजिह्वाः என்று மந்திரவர்ணம்.

## सप्तवाहनः ॥ ८२९ ॥

1. ஏழு குதிரைகளை வாஹனங்களாயுடையவர். 2. 'ஸப்தம்' என்று பெயருள்ள ஒரு குதிரையை வாஹனமாயுடையவர். 'एकोऽश्वो वहति सप्तनामा' என்று சுருதி.

## अमूर्तिः ॥ ८३० ॥

1. சராசரலக்ஷணமான மூர்த்தி இல்லாதவர். 2. தேஹஸம்பந்தமில்லாதவர்.

## अनघः ॥ ८३१ ॥

துக்கம், பாபம் இவைகளில்லாதவர்.

## अचिन्त्यः ॥ ८३२ ॥

1. பிரமாதா முதலானவர்களுக்கெல்லாம் ஸாக்ஷியாயிருக்கிறபடியால் ஸகலப் பிரமாணங்களாலுமறியமுடியாதவர். 2. விசுவப் பிரபஞ்சத்திற்கும் விலக்ஷணரானபடியால் இப்படிப்பட்டவர் என்று மனதால் நினைக்கமுடியாதவர்.

## भयकृत् ॥ ८३३ ॥

1. துர்மார்க்கத்தில் பிரவிர்த்திக்கின்றவர்களுக்குப் பயத்தைச் செய்கிறவர். 2. பக்தர்களுடைய பாபத்தை நாசம் செய்கிறவர்.

## भयनाशनः ॥ ८३४ ॥

தம்தம் வர்ணாச்ரமதர்மங்களைச் சிரத்தையுடன் அனுஷ்டிக்கிற ஸாதுக்களுடைய ஸம்ஸார பயத்தை நாசம் செய்கிறவர். 'वर्णाश्रमाचारवता पूरुषेण परः पुमान्। विष्णुराराध्यते पन्था नान्यस्तत्तोषकारकः॥ என்று பராசரருடைய வசனம்.

अणुर्बृहत्कृशः स्थूलो गुणभृन्निर्गुणो महान्।
अधृतः स्वधृतः स्वास्यः प्राग्वंशो वंशवर्धनः॥

## अणुः ॥ ८३५ ॥

ஸூக்ஷ்மத்திலும் ஸூக்ஷ்மராயிருக்கிறவர். 'एषोऽणुरात्मा चेतसा वेदितव्यः' என்று சுருதி.

## बृहत् ॥ ८३६ ॥

பெரியதாயும், பெரியதாக ஆகிறவராயிருக்கிற பிரம்மம். 'महतो महीयान्' என்று சுருதி.

## कृशः ॥ ८३७ ॥

'अस्थूलम्' என்ற முதலான சுருதியால் திரவியப் பிரதிஷேதராய் கிருசராயிருக்கிறவர்.

## स्थूलः ॥ ८३८ ॥

ஸர்வாத்மகரானபடியால் ஸ்தூலர்.

## गुणभृत् ॥ ८३९ ॥

ஸ்ருஷ்டி, ஸ்திதி, விநாசம் இவைகளில் ஸத்வரஜஸ்தமோகுணங்களைப் பரிக்கிறவர்.

## निर्गुणः ॥ ८४० ॥

பரமார்த்தமாய்க் குணரஹிதர். 'केवलो निर्गुणश्च' என்று சுருதி.

## महान् ॥ ८४१ ॥

சப்தம் முதலான குணங்களில்லாதபடியாலும், அதிஸூக்ஷ்மரானபடியாலும், நித்ய சுத்த புத்த முக்தஸ்வபாவத்திற்குக் கர்மாவால் பிர

திபந்தமுண்டாகுமோ வென்று தர்க்கத்தினல் கூடச் சொல்லக்கூடாதவர். 'अनङ्गोऽशब्दोऽशरीरोऽस्पर्शश्च महाञ्छुचिः' என்று ஆபஸ்தம்பருடைய வசனம்.

## अधृतः ॥ ८४२ ॥

பூமியைத் தரிக்கிறவர்களை தரிக்கிறபடியால் எவராலும் தரிக்கமுடியாதவர்.

## स्वधृतः ॥ ८४३ ॥

தன்னைத் தானே தரிக்கிறவர். 'स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वे महिम्नि' என்று சுருதி.

## स्वास्यः ॥ ८४४ ॥

1. தாமரைதளம் போல் தாம்ரமான முகத்தையுடையவர். 2. புருஷார்த்தோபதேசத்திற்காக வேதார்த்தமான சப்தராசிக்கு உத்பத்திஸ்தானமான முகத்தையுடையவர். 'अस्य महतो भूतस्य' என்று சுருதி.

## प्राग्वंशः ॥ ८४५ ॥

ஆதியான பிரபஞ்ச ஸ்ருஷ்டியையுடையவர்.

## वंशवर्धनः ॥ ८४६ ॥

பிரபஞ்சமான வம்சத்தை விருத்தி செய்கிறவர்.

भारकृत्कथितो योगी योगीशः सर्वकामदः ।
आश्रमः श्रमणः क्षामः सुपर्णो वायुवाहनः ॥ १०४॥

## भारभृत् ॥ ८४७ ॥

அனந்தர் முதலான ரூபத்தால் பூமியின் பாரத்தைத் தரிக்கிறவர்.

## कथितः ॥ ८४८ ॥

1. தேவர் முதலானவர்களால் சிரேஷ்டராகக் சொல்லப்பட்டவர். 2. ஸகல வேதங்களாலும் சிரேஷ்டராகச் சொல்லப்பட்டவர். 'सर्वे वेदा यत्पदमामनन्ति वेदैश्च सर्वैरहमेव वेद्यः' என்று சுருதி. 'वेदे रामायणे चैव पुराणे भारते तथा । आदौ मध्ये तथाचान्ते विष्णुः सर्वत्र गीयते ॥" என்று ஸ்மிருதி.

## योगी ॥ ८४९ ॥

1. ஞானத்தால் அறியப்பட்டவர். 2. ஸமாதியால் தன்னைத் தானே அறிகின்றவர்.

## योगीशः ॥ ८५० ॥

மற்ற யோகிகளைப் போல் இடையூறுகளால் தடுக்கப்படாமல் ஸ்வரூபத்திலிருந்து கொஞ்சமும் பிரமாதமில்லாமலிருப்பதால் யோகிகளுக்கெல்லாம் ஈசர்.

## सर्वकामदः ॥ ८५१ ॥

பக்தர்களுக்கு ஸமஸ்த காமங்களையும் கொடுக்கிறவர். 'फलमत उपपत्तेः' என்று வியாஸபகவானுடைய ஸூத்ரம்.

## आश्रमः ॥ ८५२ ॥

ஸம்ஸாரமாகிற காட்டில் திரிகின்றவர்களான ஸகலருக்கும் ஆசிரமம் போல் சிரமபரிஹாரஸ்தானமாயிருக்கிறவர்.

## श्रमणः ॥ ८५३ ॥

அவிவேகிகளை ஸம்ஸாரத்தில் பரிதபிக்கும்படி செய்கிறவர்.

## क्षामः ॥ ८५४ ॥

ஸமஸ்தப்ரஜைகளையும் ஸம்ஹாரகாலத்தில் க்ஷீணமாய்ச் செய்கிறவர்.

## सुपर्णः ॥ ८५५ ॥

விருக்ஷரூபமான ஸம்ஸாரத்திற்குச்சோபனமான வேதங்களை இலைகளாயுடையவர். 'छन्दांसि यस्य पर्णानि' என்று கீதை.

## वायुवाहनः ॥ ८५६ ॥

வாயுவைக் காற்று வீசும்படி செய்கிறவர். 'भीषास्माद्वायुः पवते' என்று சுருதி.

धनुर्धरो धनुर्वेदो दण्डो दमयिता दमः ।
अपराजितः सर्वसहो नियन्ता नियमोऽयमः ॥१०८

## धनुर्धरः ॥ ८५७ ॥

ஸ்ரீராமரூபராய்த் தனுஸ்ஸைத் தரித்தவர்.

## धनुर्वेदः ॥ ८५८ ॥

தனுர்வேதத்தை அறிந்த ஸ்ரீராமர்.

## दण्डः ॥ ८५९ ॥

தண்டிக்கிறவர்களுக்குள் தண்டமாயிருக்கிறவர். 'दण्डो दमयितामस्मि' என்று கீதை.

## दमयिता ॥ ८६० ॥

யமன், மனு முதலானவர்களின் ரூபங்களால் பிரஜைகளைத் தமனம் செய்கிறவர்.

## दमः ॥ ८६१ ॥

தண்டிக்கத் தகுந்தவர்களிடத்தில் தண்டகார்யமாயிருக்கிறவர்.

## अपराजितः ॥ ८६२ ॥

சத்ருக்களால் தோற்கடிக்கப்படாதவர்.

## सर्वसहः ॥ ८६३ ॥

1. ஸமஸ்த கர்மாக்களிலும் ஸமர்த்தர். 2. ஸகலசத்ருக்களையும் ஸஹிக்கிறவர்.

## नियन्ता ॥ ८६४ ॥

ஸகலப் பிராணிகளையும் தம் தம் கார்யங்களில் நியமிக்கிறவர்.

## अनियमः ॥ ८६५ ॥

தனக்குமேல் ஒருவருமில்லாதபடியால் நியந்தா இல்லாதவர்.

## अयमः ॥ ८६६ ॥

ஸகஸ்தப் பிராணிகளுக்கும் நியந்தாவானபடியால் ம்ருத்யு ரஹிதர். அல்லது नियमो यमः என்று ஒரு நாமா. அதாவது யமநியமங்கள் யோகங்களின் அங்கங்கள். அந்த யோகங்களால் அறியப்பட்டவரான பரமாத்மாவே नियमो यमः என்று சொல்லப்பட்டது.

सत्ववान्सात्विकः सत्यः सत्यधर्मपरायणः ।
अभिप्रायः प्रियार्होऽर्हः प्रियकृत्प्रीतिवर्धनः ॥

## सत्त्ववान् ॥ ८६७ ॥

சௌர்யம், வீர்யம் முதலான ஸத்துவத்தையுடையவர்.

## सात्त्विकः ॥ ८६८ ॥

ஸத்துவகுணத்திலேயே ப்ராதான்யமாயிருக்கிறவர்.

## सत्यः ॥ ८६९ ॥

ஸாதுக்களிடத்தில் ஸாதுவாயிருக்கிறவர்.

## सत्यधर्मपरायणः ॥ ८७० ॥

யதார்த்தத்தைச் சொல்லுதலான ஸத்தியம், தர்மம் இவைகளில் நியதர்.

## अभिप्रायः ॥ ८७१ ॥

1. புருஷார்த்தங்களை விரும்புகிறவர்களால் பிரார்த்திக்கப்படுகிறவர். 2. பிரளயகாலத்தில் ஸகலஜகத்திற்கும் அபிமுக்கியமான லயஸ்தானமாயிருக்கிறவர்.

## प्रियार्हः ॥ ८७२ ॥

இஷ்டமான ஸகலவஸ்துக்களுக்கும் யோக்கியர். 'यद्यदिष्टतमं लोके यच्चास्य दयितं गृहे । तत्तद्गुणवते देयं तदेवाक्षयमिच्छता ॥' என்று ஸ்மிருதி.

## अर्हः ॥ ८७३ ॥

ஸ்வாகதம், ஆஸனம், பிரசம்சை, அர்க்கியம், பாத்யம், ஸ்துதி, நமஸ்காரம் இவைகளான பூஜா ஸாதனங்களால் பூஜிக்கத் தகுந்தவர்.

## प्रियकृत् ॥ ८७४ ॥

பூஜார்ஹர்மட்டுமல்ல. தன்னை ஸ்துதி நமஸ்

காராதிகளால் பஜிக்கிறவர்களுக்குப் பிரியத்தைச் செய்கிறவர்.

## प्रीतिवर्धनः ॥ ८७५ ॥

அப்படிப்பட்ட பக்தர்களுக்குப் ப்ரீதியை விருத்திசெய்கிறவர்.

विहायसगतिर्ज्योतिः सुरुचिर्हुतभुग्विभुः ।
रविर्विरोचनः सूर्यः सविता रविलोचनः ॥ १०७ ॥

## विहायसगतिः ॥ ८७६ ॥

ஆகாசத்தையே ஆச்ரயமாயுடையவர். அதாவது விஷ்ணுபதம் அல்லது ஸூர்யன்

## ज्योतिः ॥ ८७७ ॥

ஸ்வயம் ஜ்யோதியாயிருக்கிறவர். 'नारायण परं ज्योतिः' என்று மந்த்ரவர்ணம்.

## सुरुचिः ॥ ८७८ ॥

சோபனமான தீப்தி அல்லது இச்சையையுடையவர்.

## हुतभुक् ॥ ८७९ ॥

ஸமஸ்த தேவதைகளைக் குறித்துப் பிரவிருத்தமான கர்மாக்களில் ஆஹுதி செய்யப்பட்டதைப் புஜிக்கிறவர். அல்லது காப்பாற்றுகிறவர்

## विभुः ॥ ८८० ॥

எங்கும் வியாபித்துக்கொண்டு மூன்று லோகங்களுக்கும் ஈசுவரராயிருக்கிறவர்.

## रविः ॥ ८८१ ॥

ஆதித்யரூபராய் இருந்துகொண்டு ரஸங்களைக் கிரஹித்துக்கொள்ளுகிறவர். 'रसानां च तथादानाद्रविरित्यभिधीयते ।' என்று விஷ்ணுதர்மோத்தரம்.

## विरोचनः ॥ ८८२ ॥

அனேகவிதமாய்ப் பிரகாசிக்கிறவர்.

## सूर्यः ॥ ८८३ ॥

ஐசுவர்யத்தைக் கொடுக்கிற ஸூர்யன் அல்லது அக்நி.

## सविता ॥ ८८४ ॥

ஸமஸ்த ஜகத்திற்கும் பிரஸவத்தைக் கொடுக்கிறவர். 'प्रजानां त्वं प्रसवनात्सवितेति निगद्यसे । என்று விஷ்ணுதர்மோத்தரம்.

## रविलोचनः ॥ ८८५ ॥

ஸூர்யனை நேத்திரமாயுடையவர். 'अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ' என்று ச்ருதி.

अनन्तो हुतभुग्भोक्ता सुखदो नैकजोऽग्रजः ।
अनिर्विण्णः सदामर्षी लोकाधिष्ठानमद्भुतः ॥१०८॥

## अनन्तः ॥ ८८६ ॥

நித்யரானபடியாலும், ஸர்வகதரானபடியாலும், தேசகாலவஸ்துபரிச்சேதரஹிதரானபடியாலும் அனந்தர். அல்லது சேஷரூபர்.

## हुतभुक् ॥ ८८७ ॥

ஹுதத்தைப் புஜிக்கிறவர்.

## भोक्ता ॥ ८८८ ॥

1. அசேதனமாயும் போக்யமாயுமிருக்கிற பிரக்ருதியை அனுபவிக்கிறவர். 2. ஜகத்தைப் பரிபாலனம் செய்கிறவர்.

## सुखदः அல்லது असुखदः ॥ ८८९ ॥

பக்தர்களுக்கு மோக்ஷரூபமான ஸுகத்தைக் கொடுக்கிறவர். அல்லது அவர்களுடைய துக்கத்தை நாசம் செய்கிறவர்.

## नैकजः ॥ ८९० ॥

தர்மரக்ஷணார்த்தம் அடிக்கடி அவதரிக்கிறவர்.

## अग्रजः ॥ ८९१ ॥

ஆதியிலுண்டான ஹிரண்யகர்ப்பர். 'हिरण्यगर्भः समवर्तताग्रे' என்று சுருதி.

## अनिर्विण्णः ॥ ८९२ ॥

ஸ்வபாவமாய் ஸர்வகாமத்தையும் அடைந்தவரானதாலும், அடையவேண்டியதொன்றுமில்லாதவரானபடியாலும் நிர்வேதமே இல்லாதவர்.

## सदामर्षी ॥ ८९३ ॥

ஸாதுக்களிடத்தில் பொறுமையாயிருக்கிறவர்.

## लोकाधिष्ठानम् ॥ ८९४ ॥

ஆதாரமில்லாத பரமாத்மாவை ஸகலலோகங்களும் ஆதாரமாயுடையதாயிருக்கிறபடியால் ஸகல லோகங்களுக்கும் ஆதாரபூதமான பிரம்மம்.

## अद्भुतः ॥ ८९५ ॥

1. ஆச்சரியமாயிருக்கிறவர். 2. ஆச்சரியமான ரூபம், சக்தி, வியாபாரம் இவைகளையுடையவர். 'श्रवणायापि बहुभिर्यो न लभ्यः शृण्वन्तोऽपि बहवो यं न विदुः । आश्चर्यो वक्ता कुशलोऽस्य लब्धा आश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः' என்று சுருதி. 'आश्चर्यवत्पश्यति कश्चिदेनम्' என்று கீதை.

सनात्सनातनतमः कपिलः कपिरप्ययः ।
स्वस्तिदः स्वस्तिकृत्स्वस्ति स्वस्तिभुक्स्वस्तिदक्षिणः ॥

## सनात् ॥ ८९६ ॥

காலரூபராயிருப்பவர்.

## सनातनतमः ॥ ८९७ ॥

பிரம்மா முதலான ஸனாதனர்களுக்கெல்லாம் ஸனாதனர்.

## कपिलः ॥ ८९८ ॥

படபானலத்தின் கபிலவர்ணத்தைப் போல் ரூபத்தையுடையவர்.

## कपिः ॥ ८९९ ॥

கிரணங்களால் ஜலத்தைக் கிரஹித்துக் கொள்ளுகிற ஸூரியன். அல்லது வராஹர். 'कपिर्वराहःश्रेष्ठश्च' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## अप्ययः ॥ ९०० ॥

பிரளயகாலத்தில் ஜகத்திற்கு முக்கியஸ்தானமாயிருக்கிறவர்.

## स्वस्तिदः ॥ ९०१ ॥

பக்தர்களுக்கு மங்களத்தைக் கொடுக்கிறவர்

## स्वस्तिकृत् ॥ ९०२ ॥

பக்தர்களுக்கு மங்களத்தைச்செய்கிறவர்.

## स्वस्ति ॥ ९०३ ॥

பரமானந்தலக்ஷணமான மங்களஸ்வரூபர்.

## स्वस्तिभुक् ॥ ९०४ ॥

பரமானந்தலக்ஷணமான மங்களத்தையே அநுபவிக்கிறவர்.

## स्वस्तिदक्षिणः ॥ ९०५ ॥

1. மங்களஸ்வரூபராய் விருத்தியை அடைகிறவர். 2. மங்களத்தைச் செய்வதில் ஸமர்த்தர். 3. மங்களத்தைச் சீக்கிரமாய்க் கொடுப்பதில் ஸமர்த்தர். 'स्मरणादेव कृष्णस्य सिध्यन्ति सर्वसिद्धयः । स्मृते सकलकल्याणभाजनं यत्र जायते ॥ पुरुषस्वमजं नित्यं व्रजामि शरणं हरिम् । स्मरणादेव कृष्णस्य पापसंघातपञ्जरम् । शतधा भेदमायाति गिरिर्वज्रहतो यथा ॥' என்ற வசனங்கள்.

अरौद्रः कुण्डली चक्री विक्रम्यूर्जितशासनः ।
शब्दादिगः शब्दसहः शिशिरः शर्वरीकरः ॥ ११० ॥

## अरौद्रः ॥ ९०६ ॥

காமம், ராகம், கோபம் இந்த மூன்று ரௌத்திரங்களுமில்லாதவர்.

## कुण्डली ॥ १०७ ॥

1. ஆதிசேஷனுடைய ரூபத்தை தரித்தவர். 2. ஸூர்யமண்டலத்திற்குச் சமமான குண்டலத்தைத் தரித்திருக்கிறவர். 3. ஸாங்க்யம், யோகம் இந்த ரூபமான குண்டலங்களை யுடையவர்.

## चक्री ॥ १०८ ॥

ஸமஸ்த லோகங்களையும் ரக்ஷிக்கும்பொருட்டு மனஸ்தத்த்வாத்மகமான ஸுதர்சனத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறவர்.

## विक्रमी ॥ १०९ ॥

மற்றவர்களுடைய பாதவிக்ஷேபம், சௌர்யம் இவைகளுக்கு விலக்ஷணங்களான பாதவிக்ஷேபம், சௌர்யம் இவைகளையுடையவர்.

## ऊर्जितशासनः ॥ ११० ॥

சுருதி ஸ்மிருதி லக்ஷணமான ஊர்ஜிதமான சாஸனத்தை யுடையவர். 'श्रुतिस्मृती ममैवाज्ञे यस्ते उल्लङ्घ्य वर्तते । आज्ञाच्छेदी मम द्वेषी मद्भक्तोऽपि न वैष्णवः ॥' என்று பகவத்வசனம்.

## शब्दातिगः ॥ १११ ॥

சப்தத்தின் பிரவிருத்திக்குக் காரணங்க

ளான ஜாதிமுதலானவைகளில்லாதபடியாலும், சப்தத்தால் சொல்லமுடியாதவரானபடியாலும் சப்தத்தைத் தாண்டி இருக்கிறவர். 'यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह। என்று சுருதி.

## शब्दसहः ॥ ९१२ ॥

ஸமஸ்த வேதங்களாலும் தாத்பர்யமாய்ச் சொல்லப்பட்டவர். 'सर्वे वेदा यत्पदमामनन्ति' என்று சுருதி. 'वेदैश्च सर्वैरहमेव वेद्यः' என்று ஸ்மிருதி.

## शिशिरः ॥ ९१३ ॥

தாபத்திரயங்களால் பீடிக்கப்பட்டவர்களுக்குச் சிசிருதுபோல் சிரமபரிஹாரஸ்தானபூதராயிருக்கிறவர்.

## शर्वरीकरः ॥ ९१४ ॥

ஸம்ஸாரிகளுக்கு ஆத்மக்ஞானத்தை இரவுபோல் செய்கிறவர். அதாவது இரவில் ஸமஸ்தப் பிராணிகளும எப்படித் தூங்குகிறார்களோ அப்படியே ஆத்மக்ஞானமில்லாதவர்களை அக்ஞானத்தில் சுழலும்படி செய்கிறவர். ஞானிகளுக்கு ஸம்ஸாரத்தை இரவுபோல செய்கிறவர். 'या निशा सर्वभूतानां तस्यां जाग्रति संयमी।

यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥' என்று கீதை.

अक्रूरः पेशलो दक्षो दाक्षिणः क्षमिणां वरः ।
विद्वत्तमो वीतभयः पुण्यश्रवणकीर्तनः ॥ १११ ॥

## अक्रूरः ॥ ९१५ ॥

ஸர்வகாமங்களையு மடைந்தவரான படியால் கோபம் அஹங்காரம் இவைகளாலுண்டாகக் கூடிய க்ரூரபாவமில்லாதவர்.

## पेशलः ॥ ९१६ ॥

கர்மா, மனஸ், வாக்கு, சரீரம் இவைகளால் சோபனர்.

## दक्षः ॥ ९१७ ॥

பெரியவராயும, ஸமர்த்தராயும், கார்யங்களைச் சீக்கிரம் செய்யக்கூடியவராயுமிருக்கிறவர் தக்ஷர் இம்மூன்று குணங்களும் பரமாத்மாவிடத்தில் நியதமாயிருக்கிறபடியால் தக்ஷர்.

## दाक्षिणः ॥ ९१८ ॥

இந்த நாமாவுக்கும் மேற்சொன்ன அர்த்தந் தான். அல்லது எங்கும் செல்லுகிறவர். துஷ்டர் களை ஹிம்ஸிக்கிறவர்.

## क्षमिणां वरः ॥ ११९ ॥

1. பொறுமையையுடைய யோகிகள், பூமி முதலானவைகளைத் தரிக்கின்றவர்கள் இவர்களுக்கெல்லாம் சிரேஷ்டர். 2. அகிலமான பிரம்மாண்டத்தையும் வஹித்துக்கொண்டு பூமியைப்போல் பாரத்தால் பீடிக்கப்படாமல் பூமியை அபேக்ஷித்துப் பொறுமையில் சிரேஷ்டர். 3. ஸமஸ்தக் கிரியைகளையும் செய்து முடிக்கக்கூடிய ஸமர்த்தர்களுக்கெல்லாம் சிரேஷ்டர்.

## विद्वत्तमः ॥ १२० ॥

எவருக்குமில்லாத அதிசயமான க்ஞானத்தையுடையவர்.

## वीतभयः ॥ १२१ ॥

ஸர்வேசுவரரானபடியாலும் நித்யமுக்தரானபடியாலும் ஸாம்ஸாரிகபயமே இல்லாதவர்.

## पुण्यश्रवणकीर्तनः ॥ १२२ ॥

புண்யகரமான சிரவணம், கீர்த்தனம் இவைகளையுடையவர். 'य इदं शृणुयान्नित्यं' என்று சிரவணபலன் பின்னால் சொல்லப்படுகிறது.

उत्तारणो दुष्कृतिहा पुण्यो दुःस्वप्ननाशनः ।
वीरहा रक्षणः सन्तो जीवनः पर्यवस्थितः ॥११॥

## उत्तारणः ॥ १२३ ॥

முமுக்ஷுக்களை ஸம்ஸாரஸாகரத்திலிருந்து தாண்டுவிக்கிறவர்.

## दुष्कृतिहा ॥ १२४ ॥

1. பக்தர்களுடைய பாபங்களை நாசம் செய்கிறவர். 2. பாபம் செய்கிறவர்களை வதம் செய்கிறவர்.

## पुण्यः ॥ १२५ ॥

1. ஸ்மரணம் முதலானவைகளைச் செய்யும் பக்தர்களுக்குப் புண்யத்தைக் கொடுக்கிறவர். 2. புண்யரூபர். 3. ஸ்ம்ருதிலக்ஷணமான வாக்கால் புண்யத்தைச் சொல்லுகிறவர்.

## दुःस्वप्ननाशनः ॥ १२६ ॥

பின்னால் வரும் ஸங்கதிகளைக் காண்பிக்கும் கெட்ட ஸ்வப்னங்களை ஸ்துதி, தியானம், கீர்த்தனம் இவைகளால் நாசம் செய்கிறவர்.

## वीरहा ॥ १२७ ॥

ஸம்ஸாரிகளுடைய விவிதமான கதிகளை முக்

தியைக் கொடுப்பதால் நாசம் செய்கிறவர்.

## रक्षणः ॥ १२८ ॥

ஸத்துவ குணத்தை ஆசிரயித்து மூன்று லோகங்களேயும் ரக்ஷிக்கிறவர்.

## सन्तः ॥ १२९ ॥

வித்தை, விநயம் இவைகளின் விருத்தியின் பொருட்டு ஸன்மார்க்கவர்த்திகளான ஸாதுக்களின் ஸ்வரூபராயிருக்கிறவர்.

## जीवनः ॥ १३० ॥

ஸமஸ்தப் பிரஜைகளேயும் பிராணரூபியாயிருந்துகொண்டு ஜீவிக்கும்படி செய்கிறவர்.

## पर्यवस्थितः ॥ १३१ ॥

விசுவமெங்கும் வியாபித்திருக்கிறவர்.

अनन्तरूपोऽनन्तश्रीर्जितमन्युर्भयापहः ।
चतुरश्रो गभीरात्मा विदिशो व्यादिशो दिशः ॥

## अनन्तरूपः ॥ १३२ ॥

1. அனந்தர் முதலான ரூபமாயிருக்கிறவர்.
2. பிரபஞ்சரூபியாயிருக்கிறவர்.

## अनन्तश्रीः ॥ १३३ ॥

அபரிமிதமான சக்தியையுடைய பராசக்தி

யையுடையவர். 'परास्य शक्तिर्विविधैव श्रूयते' என்று சுருதி.

## जितमन्युः ॥ १३४ ॥

கோபத்தை ஜயித்தவர்.

## भयापहः ॥ १३५ ॥

பிராணிகளுடைய ஸம்ஸாரபயத்தை நாசம் செய்கிறவர்.

## चतुरश्रः ॥ १३६ ॥

பிராணிகளுக்குக் கர்மானுரூபமான பலனைக் கொடுக்கிறவர்.

## गभीरात्मा ॥ १३७ ॥

பரிச்சேதம் செய்யமுடியாத அசிந்தியமான ஆத்மா அல்லது மனதையுடையவர்.

## विदिशः ॥ १३८ ॥

அதிகாரிகளுக்குத் தக்கபடி விவிதமான பலனைக் கொடுக்கிறவர்.

## व्यादिशः ॥ १३९ ॥

இந்திரன் முதலானவர்களுக்கு விவிதமான ஆக்ஞைகளைக் கொடுக்கிறவர்.

## दिशः ॥ ९४० ॥

வேதரூபமாய் ஸமஸ்தமான கர்மாக்களுக்கும் பலனைக் காண்பிக்கிறவர்.

अनादिर्भूर्भुवो लक्ष्मीः सुवीरो रुचिराङ्गदः ।
जननो जनजन्मादिर्भीमो भीमपराक्रमः ॥ ११४ ॥

## अनादिः ॥ ९४१ ॥

ஸர்வகாரணரானபடியால் தனக்குக் காரணமில்லாதவர்.

## भूः ॥ ९४२ ॥

ஸமஸ்த பூதங்களுக்கும் ஆசிரயபூதர். அல்லது ஸமஸ்தபூதங்களுக்கும் ஆதாரமான பூமிக்கும் ஆதாரர். இவ்விடத்தில் **भूर्भुवः** என்று நாமா.

## भुवो लक्ष्मीः ॥ ९४३ ॥

பரமாத்மா பூமிக்கு ஆதாரபூதர்மட்டுமல்ல. பூமிக்குச் சோபையாயிருக்கிறவர். அல்லது பூலோகம், புவர்லோகம் இவைகளுக்கு ஆத்மவித்தையாயிருக்கிறவர். அல்லது பூமி, அந்தரிக்ஷம் இவைகளுக்குச் சோபையாயிருக்கிறவர்.

## सुवीरः ॥ ९४४ ॥

1. விவிதமான சோபனமான கதிகளையுடையவர். 2. சோபனமாயும் விவிதமாயும் சொல்லப்படுகிறவர்.

## रुचिराङ्गदः ॥ ९४५ ॥

அழகான அங்கதங்களையுடையவர்.

## जननः ॥ ९४६ ॥

பிராணிகளை உத்பத்தி செய்கிறவர்.

## जनजन्मादिः ॥ ९४७ ॥

பிராணிகளின் உத்பத்திக்கு மூலகாரணர்.

## भीमः ॥ ९४८ ॥

பயஹேதுவாயிருக்கிறவர். 'महद्भयं वज्रमुद्यतम्' என்று மந்திரவர்ணம்.

## भीमपराक्रमः ॥ ९४९ ॥

அவதாரங்களில் அஸுரர்களுக்குப் பயங்கரமான பராக்கிரமத்தையுடையவர்.

आधारनिलयोऽधाता पुष्पहासः प्रजागरः ।
ऊर्ध्वगः सत्पथाचारः प्राणदः प्रणवः पणः ॥ ११९

## आधारनिलयः ॥ ९५० ॥

பிருதிவீ முதலான பஞ்சபூதங்களான ஆதாரங்களுக்கெல்லாம் ஆதாரபூதர்.

## अधाता ॥ ९५१ ॥

ஸ்வயம் ஆதாரராகையால் தனக்கு ஆதார மில்லாதவர். அல்லது धाता என்று பதம். ஸம்ஹாரசமயத்தில் ஸகலப் பிரஜைகளையும் விழுங்குகிறவர்.

## पुष्पहासः ॥ ९५२ ॥

மொட்டுரூபமாய் இருக்கிற புஷ்பங்களின் விகாஸம்போல் பிரபஞ்சரூபமான விகாஸத்தை யுடையவர்.

## प्रजागरः ॥ ९५३ ॥

நித்தியப் பிரபுத்தரானபடியால் எப்பொழுதும் விழித்துக்கொண்டிருக்கிறவர்.

## ऊर्ध्वगः ॥ ९५४ ॥

ஸகலருக்கும மேலாக இருக்கிறவர்.

## सत्पथाचारः ॥ ९५५ ॥

ஸாதுக்களுடைய கர்மாக்களை அனுஷ்டிக்கிறவர்.

## प्राणदः ॥ ९५६ ॥

கர்பத்தில் இறந்த பரீக்ஷித்து முதலானவர்களை ஜீவிக்கும்படி செய்தவர்.

## प्रणवः ॥ ९५७ ॥

பரமாத்மாவின் வாசகமான ஓங்கார ரூபர்.

## पणः ॥ ९५८ ॥

1. தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவைகளுக்கு நாமம், ரூபம் இவைகளை வைத்து வியவஹரிக்கிறவர். 'सर्वाणि रूपाणि विचित्य धीरः नामानि कृत्वाभि-वदन् यदास्ते' என்று சுருதி. 2. பிராணிகளின் புண்யங்களை கிரஹித்துக்கொண்டு அவைகளுக்குப் பதிலாகப் பலன்களைக் கொடுத்து கிரய விக்கிரயம் செய்கிறவர்போலிருக்கிறவர்.

प्रमाणं प्राणनिलयः प्राणभृत्प्राणजीवनः ।
तत्त्वं तत्त्वविदेकात्मा जन्ममृत्युजरातिगः ॥ ११६ ॥

## प्रमाणम् ॥ ९५९ ॥

ஸ்வயம் பிரகாசமான ஞானஸ்வரூபர். 'प्रज्ञानं ब्रह्म' என்று சுருதி. 'ज्ञानस्वरूपमत्यन्तं निर्मलं परमार्थतः। तदेवार्थस्वरूपेण भ्रान्तिदर्शनतः स्थितम् ॥ என்று விஷ்ணு புராணம்.

## प्राणनिलयः ॥ ९६० ॥

இந்திரியங்களுக்கு லயஸ்தானமாயிருக்கிற ஜீவன். 2. பிராணன் முதலான ஐந்து வாயுக்

களுக்கும் லயஸ்தானமான ஜீவனுக்கும் லய ஸ்தானமாயிருக்கிறவர். 3. பிராணன்களை யும் ஜீவனையும் தன்னிடத்தில் ஸம்ஹரித்து அவைகளுக்கு ஆச்ரயராயிருக்கிறவர்.

## प्राणभृत् ॥ ९६१ ॥

பிராணன்களை அன்னரூபமாயிருந்து போஷிக்கிறவர்.

## प्राणजीवनः ॥ ९६२ ॥

பிராணங்கள் என்ற வாயுக்களால் பிராணிகளை ஜீவிக்கும்படி செய்கிறவர். 'न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन । इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥' என்று மந்திரவர்ணம்.

## तत्त्वम् ॥ ९६३ ॥

பரமார்த்தஸத்தாயிருக்கிற பிரம்மம்.

## तत्त्ववित् ॥ ९६४ ॥

தன் ஸ்வரூபத்தை யதார்த்தமாயறிகிறவர்.

## एकात्मा ॥ ९६५ ॥

ஒருவராயிருக்கிற பரமாத்மா. 'आत्मा वा इदमेक एवाग्र आसीत्' என்று சுருதி.

## जन्ममृत्युजरातिगः ॥ ९६६ ॥

பிறப்பு, இருப்பு, விருத்தி, பரிணாமம், அபக்ஷயம், நாசம் என்று ஆறுவிதபாவவிகாரங்களில்லாமல் எங்கும் வியாபித்திருக்கிறவர். 'न जायते म्रियते वा विपश्चित्' என்ற மந்திரவர்ணம்.

भूर्भुवःस्वस्तरुस्तारः सविता प्रपितामहः ।
यज्ञो यज्ञपतिर्यज्वा यज्ञाङ्गो यज्ञवाहनः ॥ ११७ ॥

## भूर्भुवःस्वस्तरुः ॥ ९६७ ॥

1. भूः, भुवः, स्वः என்ற வேதஸாரங்களான வியாஹ்ருதிகளால் செய்யப்பட்ட ஹோமம் முதலானவைகளால் மூன்று லோகங்களையும் காப்பாற்றுகிறவர். 'अग्नौ प्रास्ताहुतिः सम्यगादित्यमुपनिष्ठते । आदित्याज्जायते वृष्टिर्वृष्टेरन्नं ततः प्रजाः ॥' என்று மனுவசனம். 2. भूः, भुवः, स्वः, என்று சொல்லப்பட்ட ஸம்ஸாரவிருக்ஷம். 3. भूः, भुवः, स्वः என்று சொல்லப்பட்ட மூன்று லோகங்களையும் விருக்ஷம்போல் வியாபித்துக்கொண்டிருக்கிறவர்.

## तारः ॥ ९६८ ॥

1. ஸம்ஸாரஸாகரத்திலிருந்து தாண்டுவிக்கிறவர். பிரணவம்.

## सविता ॥ ९६९ ॥

ஸமஸ்த லோகங்களுக்கும் ஜனகர்.

## प्रपितामहः ॥ ९७० ॥

பிதாமஹரான பிரம்மாவுக்கும் பிதா.

## यज्ञः ॥ ९७१ ॥

யக்ஞஸ்வரூபர்.

## यज्ञपतिः ॥ ९७२ ॥

யக்ஞங்களைக் காப்பாற்றுகிறவர். அல்லது யக்யங்களுக்கு ஸ்வாமி. 'अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च' என்று கீதை.

## यज्वा ॥ ९७३ ॥

யக்ஞத்தில் யஜமானரூபராயிருக்கிறவர்.

## यज्ञाङ्गः ॥ ९७४ ॥

யக்ஞங்களை அவயவங்களாயுடைய வராஹ மூர்த்தி. 'वेदपादो यूपदंष्ट्रः क्रतुहस्ताश्रितमुखः । अग्निजिह्वो दर्भरोमा ब्रह्मशीर्षो महातपाः ॥' என்று முதலான அவயவங்கள் ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## यज्ञवाहनः ॥ ९७५ ॥

பலத்திற்குக் காரணமான யக்ஞங்களை வஹிக்கும்படி செய்கிறவர்.

यज्ञभृद्यज्ञकृद्यज्ञी यज्ञभुग्यज्ञसाधनः ।
यज्ञान्तकृद्यज्ञगुह्यमन्नमन्नाद एव च ॥ ११८ ॥

## यज्ञभृत् ॥ १७६ ॥

யக்ஞத்தைப் பரிக்கிறவர். அல்லது காப்பாற்றுகிறவர்.

## यज्ञकृत् ॥ १७७ ॥

ஜகத்தின் ஆதியிலும் அந்தத்திலும் யக்ஞத்தைச் செய்கிறவர். அல்லது நாசம் செய்கிறவர்.

## यज्ञी ॥ १७८ ॥

யக்ஞங்களுக்கும் அவைகளில் ஆராதிக்கப்படுகிற தேவதைகளுக்கும் பிரதானர்.

## यज्ञभुक् ॥ १७९ ॥

யக்ஞத்தைப் புஜிக்கிறவர்.

## यज्ञसाधनः ॥ १८० ॥

தன்னுடைய பிராப்தியில் யக்ஞங்களை ஸாதனமாயுடையவர்.

## यज्ञान्तकृत् ॥ १८१ ॥

யக்ஞத்தின் பலப்பிராப்தியைச் செய்கிறவர்.

## यज्ञगुह्यम् ॥ १८२ ॥

1. யக்ஞங்களுக்குள் ரஹஸ்யமான ஞானயக்ஞமாயிருக்கிறவர். 2. இஷ்டபலாபிஸந்தி ரஹிதமான யக்ஞரூபர். பரமாத்மா.

## अन्नम् ॥ १८३ ॥

1. பூதங்களை ஸம்ஹரிக்கிறவர். 2. பூதங்களால் அநுபவிக்கப்படுகிறவர்.

## अन्नादः ॥ १८४ ॥

அன்னத்தைப் புஜிக்கிறவர். ஏவ என்ற பதமானது ஸமஸ்தமான ஜகத்தும் அன்னம் முதலான ரூபமாய் போக்தா, போக்கியம் இந்த ரூபமாயிருக்கிறது என்றும் ச என்ற பதமானது ஸகலத்தையும் பரமாத்மாவிடத்தில் சேர்த்து ஸிருஷ்டியைக் காண்பிக்கிறது என்றும் காண்பிக்கப்பட்டது.

आत्मयोनिः स्वयंजातो वैखानः सामगायनः ।
देवकीनन्दनः स्रष्टा क्षितीशः पापनाशनः ॥१९॥

## आत्मयोनिः ॥ १८५ ॥

தானே ஜகத்திற்கு உபாதான காரணமாயிருக்கிறவர்.

## स्वयंजातः ॥ १८६ ॥

நிமித்தகாரணமுமாயிருக்கிறவர்.

## वैखानः ॥ १८७ ॥

பாதாளவாஸியான ஹிரண்யாக்ஷனை வதம்

செய்ய வராஹரூபியாய் பூமியை விசேஷமாய்ப் பறித்தவர்.

## सामगायनः ॥ ९८८ ॥

ஸாமகானம் செய்கிறவர்.

## देवकीनन्दनः ॥ ९८९ ॥

தேவகி தேவியின் குமாரர்.—'ज्योतींषि शुक्राणि च यानि लोके त्रयो लोका लोकपालास्त्रयी च । त्रयोऽग्नयश्चाहुतयश्च पञ्च सर्वे देवा देवकीपुत्र एव ॥' என்று மஹாபாரதம்.

## स्रष्टा ॥ ९९० ॥

ஸர்வலோகங்களின் ஸ்ருஷ்டிகர்த்தா.

## क्षितीशः ॥ ९९१ ॥

பூமியின் ஈசரான ஸ்ரீராமர்.

## पापनाशनः ॥ ९९२ ॥

கீர்த்தனம், பூஜை, ஸ்மரணம், இவைகளைச் செய்தமாத்திரத்திலேயே ஸகல பாபங்களையும் நாசம் செய்கிறவர். 'पक्षोपवासाद्यत्पापं पुरुषस्य प्रणश्यति । प्राणायामशतेनैव तत्पापं नश्यते नृणाम् ॥ प्राणायामसहस्रेण यत्पापं नश्यते नृणाम् । क्षणमात्रेण तत्पापं हरेर्ध्यानात्प्रणश्यति ॥ என்று விருத்தசாதாதபருடைய வசனம்.

शङ्खभृन्नन्दकी चक्री शार्ङ्गधन्वा गदाधरः ।
रथाङ्गपाणिरक्षोभ्यः सर्वप्रहरणायुधः ॥
सर्वप्रहरणायुध ओं नम इति ॥ १२० ॥

## शङ्खभृत् ॥ ९९३ ॥

பாஞ்சஜன்யம் என்ற சங்கத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறவர்.

## नन्दकी ॥ ९९४ ॥

வித்யாமயமான நந்தகம் என்ற கத்தியையுடையவர்.

## चक्री ॥ ९९५ ॥

1. மனஸ்தத்துவாத்மகமான ஸுதர்சனம் என்ற சக்கிரத்தையுடையவர். 2. ஸம்ஸார சக்கிரத்தை தமது ஆக்ஞையால் சுழலும்படி செய்கிறவர்.

## शार्ङ्गधन्वा ॥ ९९६ ॥

இந்திரியங்கள் முதலான ரூபமான சார்ங்கம் என்ற வில்லையுடையவர்.

## गदाधरः ॥ ९९७ ॥

புத்தி தத்துவாத்மகமான கௌமோதகம் என்ற கதையையுடையவர்.

## रथाङ्गपाणिः ॥ ९९८ ॥

சக்கிரத்தைக் கையிலுடையவர்.

## अक्षोभ्यः ॥ ९९९

சக்கராயுதம் கையிலிருப்பதால் எவராலும் க்ஷோபம் செய்யமுடியாதவர்.

## सर्वप्रहरणायुधः ॥ १००० ॥

கேவலம் மேலே சொல்லப்பட்டவைகள் தான் பரமாத்மாவுக்கு ஆயுதங்கள் என்று நியமமில்லை. ஆனால் எல்லாவற்றையும் ஆயுதங்களாயுடையவர். கையிலுள்ள சங்கங்களும் பகவானுக்கு ஆயுதங்களாகின்றன. 'एष सर्वेश्वरः' என்று சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறபடியால் ஸகலத்தையும் ஆயுதமாயுடையவர். என்று சொல்வதால் ஸத்யஸங்கல்பர் ஸர்வேசுவரர் என்று காண்பிக்கப்பட்டது. सर्वप्रहरणायुधः என்று இரண்டு தடவை சொல்வது ஸமாப்தியைக் காண்பிக்கிறது. கடைசியில் ओं नमः என்று மங்களார்த்தமாய்ச் சொல்லப்பட்டது.

इतीदं कीर्तनीयस्य केशवस्य महात्मनः ।
नाम्नां सहस्रं दिव्यानामशेषेण प्रकीर्तितम् ॥ १२१॥

இந்த மாதிரி ஸ்தோத்திரம் செய்யத்தகுந்தவராயும் மஹாத்மாவாயுமான கேசவருடைய அப்பிராகிருதமான ஆயிரம் நாமாக்களும் பாக்கியில்லாமல் சொல்லப்பட்டன.

य इदं शृणुयान्नित्यं यश्चापि परिकीर्तयेत् ।
नाशुभं प्राप्नुयात्किंचित्सोऽमुत्रेह च मानवः ॥ १२२॥

இந்த ஆயிரம் நாமாக்களை எவன் கேட்கிறானோ, எவன் உறக்கியோ, மெதுவாகவோ, மனதிலேயோ ஜபிக்கிறானோ அவன் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் ஒருக்காலும் அசுபத்தை அடைகிறதில்லை.

वेदान्तगो ब्राह्मणः स्यात्क्षत्रियो विजयी भवेत्
वैश्यो धनसमृद्धः स्याच्छूद्रः सुखमवाप्नुयात् ॥१२३॥

இந்த ஸஹஸ்ரநாமத்தைப் பிரதிதினம் ஜபிக்கிற பிராம்மணன் பிர்மக்ஞானியாயும், க்ஷத்திரியன் ஜயசீலனாயும், வைசியன் தனஸமிருத்தனாயும் சூத்திரன் ஸுகஜீவியாயிருப்பார்கள். சூத்திரனுக்கு சிரவணத்தில் தான் அதிகாரம். शूद्रः सुखमवाप्नुयात् என்று தனியாய்ச் சொல்லப்பட்டபடியால் என்று அறிந்துகொள்ளுக. वेदान्तगो ब्राह्मणः स्यात् என்ற வசனத்தாலே ஸஹஸ்ரநாமாவின் ஜபத்தினாலேயே மோக்ஷம் இல்லை என்று

காண்பிக்கப்பட்டது. ஆனால் ஸஹஸ்ரநாமாக்களின் ஜபத்தால் சித்தசுத்தியைப் பெற்று, அதனால் ஞானம் சித்தியாகி, ஞானத்தால் மோக்ஷத்தையடைகிறான் என்று அர்த்தம். கர்மாவானது ஸாக்ஷாத்தாய் மோக்ஷத்திற்குக் காரணமாகாது.

धर्मार्थी प्राप्नुयाद्धर्ममर्थार्थी चार्थमाप्नुयात् ।
कामानवाप्नुयात्कामी प्रजार्थी चाप्नुयात्प्रजाम् ॥१२४॥

தர்மத்தைக் கோருகிறவன் தர்மத்தையடைகிறான். தனத்தைக் கோருகிறவன் தனத்தையடைகிறான். காமத்தைக் கோருகிறவன் காமங்களையடைகிறான். பிரஜைகளைக் கோருகிறவன் பிரஜைகளையடைகிறான்.

भक्तिमान्यः सदोत्थाय शुचिस्तद्गतमानसः ।
सहस्रं वासुदेवस्य नाम्नामेतत्प्रकीर्तयेत् ॥ १२५ ॥

எவன் பகவானிடத்தில் பக்தியுள்ளவனாயிருக்கிறானோ அவன் விடியற்காலத்தில் எழுந்திருந்து சுத்தனாய்ப் பகவானிடத்தில் மனதை நிறுத்தி அவருடைய இந்த ஆயிரம் நாமாவை ஜபிக்கவேண்டியது.

यशः प्राप्नोति विपुलं ज्ञातिप्राधान्यमेव च ।
अचलां श्रियमाप्नोति श्रेयः प्राप्नोत्यनुत्तमम् ॥१२६॥

அப்படி ஜபிக்கிற பக்தன் அதிகமான கீர்த்தியையும், தாயாதிகளுக்குள் உத்தமஸ்தானத்தையும், அழிவில்லாத ஐசுவரியத்தையும் ஒருவருக்கும் ஸமமில்லாத சிரேயஸ்ஸையும் அடைகிறான்.

न भयं क्वचिदाप्नोति वीर्यं तेजश्च विन्दति ।
भवत्यरोगो द्युतिमान्बलरूपगुणान्वितः ॥ १२७ ॥

எங்கும் பயத்தை அடைகிறதில்லை. வீர்யம், தேஜஸ், இவைகளையுமடைகிறான். வியாதியில்லாதவனும், தேஜோவானும், பலம், ரூபம், குணம் இவைகளுடன் கூடினவனுமாகிறான்.

रोगार्तो मुच्यते रोगाद्बद्धो मुच्येत बन्धनात् ।
भयान्मुच्येत भीतस्तु मुच्येतापन्न आपदः ॥ १२८ ॥

வியாதிஸ்தன் வியாதியிலிருந்து விடுபடுகிறான். கட்டப்பட்டவன் கட்டிலிருந்து விடுபடுகிறான். பயந்தவன் பயத்திலிருந்து நீக்கப்படுகிறான். ஆபத்தையடைந்தவன் ஆபத்திலிருந்து நீங்குகிறான்.

दुर्गाण्यतितरत्याशु पुरुषः पुरुषोत्तमम् ।
स्तुवन्नामसहस्रेण नित्यं भक्तिसमन्वितः ॥ १२९ ॥

புருஷோத்தமனை பக்தியுடன் ஆயிரம் நாமாக்

களால் ஸ்தோத்ரம் செய்கிறவன் துர்க்கங்களையும் தாண்டுகிறான்.

वासुदेवाश्रयो मर्त्यो वासुदेवपरायणः ।
सर्वपापविशुद्धात्मा याति ब्रह्म सनातनम् ॥ १३० ॥

வாஸுதேவனையே ஆசிரயமாயும், அவரையே பிரகிருஷ்டமான கதியாயுமுடைய மனிதன் ஸமஸ்த பாபங்களிலிருந்தும் விடுபட்டுப் பரிசுத்தமான மனதையுடையவனாய் பரபிரம்மத்தையடைகிறான்.

न वासुदेवभक्तानामशुभं विद्यते क्वचित् ।
जन्ममृत्युजराव्याधिभयं नैवोपजायते ॥ १३१ ॥

வாஸுதேவரிடத்தில் பக்தியை யுடையவர்களுக்கு எங்கும் பயமே இல்லை. ஜனனம், மரணம், கிழட்டுத்தனம், வியாதி இவைகளின் பயமும் உண்டாகிறதில்லை.

इमं स्तवमधीयानः श्रद्धाभक्तिसमन्वितः ।
युज्येतात्मसुखक्षान्तिश्रीधृतिस्मृतिकीर्तिभिः १३२॥

இந்த சிரேஷ்டமான ஸஹஸ்ரநாமரூபமான ஸ்துதியை ஆஸ்திக புத்தியுடனும், பக்தியுடனும் பிரதிதினம் படிக்கிறவனுக்கு ஸுகம், பொருமை, ஐசுவரியம், தைரியம், ஸ்மிருதி, கீர்த்தி இவைகளுண்டாகின்றன.

न क्रोधो न च मात्सर्यं न लोभो नाशुभा मतिः ।
भवन्ति कृतपुण्यानां भक्तानां पुरुषोत्तमे ॥ १३३ ॥

புண்யவான்களான புருஷோத்தமனுடைய பக்தர்களுக்குக் கோபம், பொறாமை, பேராசை கெட்ட புத்தி இவைகள் ஒருக்காலுமுண்டாகிறதில்லை.

द्यौः सचन्द्रार्कनक्षत्रं खं दिशो भूर्महोदधिः ।
वासुदेवस्य वीर्येण विधृतानि महात्मनः ॥ १३४ ॥

ஸூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், இவைகளுடன் கூடிய ஆகாசம், திக்குகள், பூமி, ஸமுத்திரம் இவையாவும் வாஸுதேவனுடைய சக்தியால் தரிக்கப்பட்டிருக்கின்றன.

ससुरासुरगन्धर्वं सयक्षोरगराक्षसम् ।
जगद्वशे वर्ततेदं कृष्णस्य सचराचरम् ॥ १३५ ॥

தேவதைகள், அஸுரர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், ஸர்ப்பங்கள், ராக்ஷஸர்கள், ஸ்தாவர ஜங்கமங்களுடன் கூடின இந்த ஜகத்தானது ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய வசத்திலிருக்கின்றது.

इन्द्रियाणि मनो बुद्धिः सत्वं तेजो बलं धृतिः ।
वासुदेवात्मकान्याहुः क्षेत्रं क्षेत्रज्ञ एव च ॥ १३६ ॥

புத்தீந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், மனஸ், புத்தி, ஸத்துவம், தேஜஸ், பலம், தைரியம், க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன் இவையாவும் வாஸுதேவஸ்வரூபங்கள் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

सर्वागमानामाचारः प्रथमं परिकल्पते ।
आचारप्रभवो धर्मो धर्मस्य प्रभुरच्युतः ॥ १३७ ॥

ஸமஸ்த வேதங்களுக்கும் ஆசாரம் தான் முதலில் கல்பிக்கப்படுகிறது. தர்மமானது ஆசாரத்தையே காரணமாயுடையது. தர்மத்திற்கு நாராயணன் தான் பிரபு

ऋषयः पितरो देवाः महाभूतानि धातवः ।
जङ्गमाजङ्गमं चेदं जगन्नारायणोद्भवम् ॥ १३८ ॥

ருஷிகள், பித்ருக்கள், தேவர்கள், மஹாபூதங்கள், தாதுக்கள், ஜங்கமம், அஜங்கமம் இவைகளடங்கிய இந்த ஜகத்தானது நாராயணனிடத்திலிருந்து உண்டானவை.

योगो ज्ञानं तथा सांख्यं विद्याः शिल्पादि कर्मच ।
वेदाः शास्त्राणि विज्ञानमेतत्सर्वं जनार्दनात् ॥१३९॥

யோகம், ஞானம், ஸாங்கியம், வித்தைகள், சில்பம் முதலான கர்மா, வேதங்கள், சாஸ்திரங்

கள், விக்ஞானம் இவையெல்லாம் ஸ்ரீமந்நாராயணனிடத்திலிருந்தே உண்டாயின.

एको विष्णुर्महद्भूतं पृथग्भूतान्यनेकशः ।
त्रीँल्लोकान्व्याप्य भूतात्मा भुङ्क्ते विश्वभुगव्ययः ॥

மஹத்தாயிருக்கிற விஷ்ணு ஒருவர் தான் அனேகமாய்க் காணப்படுகிறார். அவரே மூன்று லோகங்களையும் தன் சக்தியால் வியாபித்துக் கொண்டு ஸர்வாந்தர்யாமியாயும், நித்யராயும் விசுவத்தை அநுபவிக்கிறார்.

इमं स्तवं भगवतो विष्णोर्व्यासेन कीर्तितम् ।
पठेद्य इच्छेत्पुरुषः श्रेयः प्राप्तुं सुखानि च ॥ १४१ ॥

வியாஸபகவானால் சொல்லப்பட்ட ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய இந்த ஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்தைச் சிரேயஸ், ஸுகம் இவைகளை விரும்பும் புருஷன் படனம் செய்யவேண்டியது.

विश्वेश्वरमजं देवं जगतः प्रभवाप्ययम् ।
भजन्ति ये पुष्कराक्षं न ते यान्ति पराभवम् ॥१४०॥

ஜகத்திற்கு ஈசராயும், ஜனனமில்லாதவராயும், ஜகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரகாரணராயுமிருக்கிற பகவானை எவர்கள் பக்தியுடன்

பஜிக்கின்றார்களோ அவர்கள் ஒருக்காலும் அவ
மானத்தை அடைகிறதில்லை.

इति विष्णोर्दिव्यसहस्रनामस्तोत्रं सविवरणं

॥ समाप्तम् ॥

ॐ तत्सत् ब्रह्मार्पणमस्तु ॥

